பாலது எனக் கொண்டு, தோழியிடம், தன் கருத்தை வெளி யிடுகின்றான். அதுகேட்ட தோழி, உடன்படாளாய், "ஐயனே! நிலையற்ற பொருளைப் பெற விரும்பி, 'இதை வளையணிந்த முன்கையை உடைய நின் தோழிக்கு உணர்த்துவாயாக' என்று கூறுகின்றனை; அவ்வாறே, யானும் சென்று உணர்த்துகின்றேன்; அவளும் 'நீயிர் செல்வீராக' எனக் கூறி விடுக்கின்றாள். 'ஆனால் அவள் அவ்வாறு விடுப்பினும், செல்வமலிந்த பல கட்டுகள் அமைந்த மாளிகையின் உட்புறத்தே இருக்கும் அழகிய சிவந்த கால்களை உடைய சேவற்புறா தன் பெடையைக் கூடுதற்கு விரும்பி அழைக்கும் அவ்வொலி கேட்குந்தோறும் வருந்தும் இவளை, இவளுடைய கண்ணையும், நுதலையும் தட விப் பிரிந்துபோதற்கு ஏற்ற வன்மை உடையீரோ? உடையீ ராயின் பிரிந்து செல்க" (நற். 71.) என்று கூறி மறுக்கின் றாள். மீண்டும், தலைவனை நோக்கித் "தலைவ! பொருளீட்டு தற் பொருட்டு வெப்பம் மிக்க, கடத்தற்கரிய வழியில் செல்வது நுமக்கு மிக்க உவகையை அளிப்பதாய் உளது. ஆனால், எம் தலைவிக்கோ எனின், நீயிர் பிரிந்து செல்லுதலைக் கேட்டவுடன், யானைப்படை பல கொண்டுள்ள பகை வேந் தன் தன் மதிற்புறத்தே தங்கியிருக்கும் காலத்தே, அஞ் சற்க என்று கூறித் துணையாக வந்த அரசன், துணை செய் யாது கைவிட்டுச் சென்றானாக, உடைபட்ட ஒரே மதிலை யுடைய அரசனுக்கு நேர்ந்த அழிவு போன்ற அழிவு வாரா நின்றது. ஆதலின், இசைந்ததொன்றினைச் செய்வாயாக" என்று கூறி மறுக்கின்றாள்.

"வெம்மை யாரிடை யிறத்தல் நுமக்கே
மெய்ம்மலி உவகை யாகின்று; இவட்கே
"அஞ்சல்" என்ற இறைகை விட்டெனப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்தலிற்
களையுநர்க் காணாது கலங்கிய உடைமதில்
ஓரெயில் மன்னன் போல
அழிவுவந் தன்றால் ஒழிதல் கேட்டே."

—நற். 43.

ஈண்டு, அஞ்சல் எனக் கூறிய துணை அரசன் தலைவனாக வும, மதிலின் அகத்தே இருக்கும் அரசன் தலைவியாகவும்,

உடைமதில் ஓரெயில் பெண்களுக்குரிய குணங்கள் எல்லாம் கழிய எஞ்சிநின்ற நாணுகவும், பகையரசன் தலைவன் பிரிந்த வுடன் தலைவியைப் பற்றி வருத்தும் பசலை நோயாகவும் கூறப்பட்டுள்ள நயம், கண்டு இன்புறற்பாலதாம். நிறக.

இவ்வாறெல்லாம் மறுத்துக் கூறிய தோழி, இறுதியில் பொருளின்றி இல்லறம் இனிது நடவாது என்பதை உணர்ந்து பிரிவிற்கு உடன்பட்டுத், "தலைவ! நீயிர் வினைவயிற் செல்வேன் செல்வேன் என்று கூறுகின்றீர்; தலைவியின் இயல்பை நன்கு அறிந்துள்ளேன் ஆதலின், 'நீயிர் செல்வீராக' என்று கூறுதற்கு அஞ்சுகின்றேன். அவ்வாறன்றி, 'செல்லாது ஈண்டே இருப்பீராக' என்பேனுயின் ஊரார் கூறும் பழிச்சொல் கண்டு அஞ்சுகின்றேன். ஆதலின், சென்மின்; சென்று வினை முடிமின்; வினைமுடிந்ததாயின் ஆண்டு நில்லாது இவண் வந்து இவளை ஓம்புமின்" (நற். 229.) என்று கூறி இசைந்து நிற்கின்றுள்.

இவ்வாறு இசைந்த தோழி, தலைவிபாற் சென்று தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியுள்ளதையும், அதற்குத் தான் இசைந்து வந்ததையும் கூறுகின்றுள். அது கேட்ட தலைவி முதலில் வருந்துகின்றுள் எனினும், இறுதியில், தலைவன் பொருள் ஈட்டி வந்தாலொழிய இல்லறம் இனிது நடவாது என்பதை உணர்ந்து, தோழியை நோக்கித் "தோழி! 'பொருள்வயிற் பிரிவேன்' என்று அவர் கூற, 'அவ்வாறு பிரிதல் நன்று' என்று கூறி உடன்பட்ட நீ நல்லதொரு செயலைச் செய்தாயேயாவாய்; ஆடவர் வினைமேற்கொண்ட உள்ளத்தவராய்ப் பொருள் ஈட்டுதற்கு அகல்வர்; அஃது அவர்கள் பண்பும் ஆகும்" என்று கூறி உடன்பட்டு ஆற்றியிருக்கின்றுள்.

"சேறும் நாமெனச் சொல்லச் சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்
ககல்வர் ஆடவர்; அதுவதன் பண்பே."

—நற். 24.

பிரிந்து சென்ற தலைமகன், இடைச்சுரத்தே தலைமகளை நினைந்து புலம்புகின்றுன். "என் நெஞ்சம், 'இருண்ட

கூந்தலையும், மையுண்ட கண்ணையும் உடைய தலைவியிடத்தே செல்வோம்; சென்று பிரிவினால் உண்டாய அவள் துயரைப் போக்குவோம்' என்று கூறுநிற்கும். என் அறிவோ எனின், 'தொடங்கிய வினையை முற்றுப்பெறச் செய்து முடித்தல் இன்றி இடையே மடங்குவோமாயின், அச் செயல் நமக்கு அறியாமையுடனே பழியையும் தரும். ஆதலின் நெஞ்சே! சிந்தித்தலின்றி ஒன்றையும் துணிந்துவிடாதே' என்று கூறுநிற்கும். இவ்விரண்டன் மாறுபாட்டுக்கிடையே நின்ற என் உடல், களிறுகள் ஒன்றோடொன்று பற்றி ஈர்த்தலினாலே தேய்ந்த புரியை உடைய பழைய கயிறு இறுவதைப் போல அழிய வேண்டியதுதான்" என்று வருந்துகின்றான்.

புறந்தாழ் பிருண்ட கூந்தல், போதின்
நிறம்பெறும் ஈரிதழ் பொலிந்த உண்கண்
உள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சம்
செல்லல் தீர்க்கம் செல்வா மென்னும்;
செய்வினை முடியா தெவ்வம் செய்தல்
எய்யா மையோ டிளிவுதலைத் தருமென
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும்; ஆயிடை
ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே.

—நற். 284.

வருந்திய தலைமகன் இறுதியில் தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சே! இவ்வாறு வருந்துவதைக் காட்டிலும், இரண்டில் ஒன்று துணியின் நலமாம். ஆகவே, பொருள் ஈட்டும் முயற்சி கொண்டு செல்வாம் எனினும் அன்றி மீண்டு ஊர் புகுவாம் எனினும் யான் தடுப்பதொன்றில்லை; இரண்டினுள் நீ துணிந்த தொன்றினைக் கூறு. அதன்படி நடத்தலே முடிபாம்" (நற். 103.) என்று கூறி மேற் செல்லுகின்றான். நிற்க;

குறித்த பருவம் எய்தவும் தலைவன் வராமை கண்டு, தலைவி வருந்துவாள், அவளைத் தேற்றுதல் வேண்டும் என எண்ணித் தலைவிபால் செல்லுகின்றாள் தோழி. சென்ற

வள், தான் எண்ணியதற்கு மாருகத் தலைவி ஆற்றியிருப்பது கண்டு வியப்புற்றுத் "தலைவி! இதோ பார், உலகில் உள்ள உயிர்த்தொகுதிகள் எல்லாம் விரும்பி எதிர்நோக்க, மேகங்கள் வலமாக எழுகின்றன. இஃது அன்ருே அவர் வருவேன் எனக் குறித்துச் சென்ற காலம். இக்காலை அவர் வாராதிருத்தலைக் கண்டும், அதுபற்றி வருந்தாது இருக்கின்றனையே; இஃது என்ன வியப்பு" (நற். 237.) என்று வினவுகின்ருள். அதற்குத் தலைவி, "தோழி! யான் அவர் சென்ற வழியின் அருமை குறித்தும், அவர் வராமை குறித்தும் வருந்துகின்றேன் எனினும், தான் செல்லும் நெறியில், நீர் நசையால் வருந்திய பிடியானையின் துன்பத்தைப் போக்கக் களிற்றியானை பல்லிடம் சென்று தேடி இறுதியில் கல்லின்கண் ஊறிநிற்கும் நீரைக் கண்டு, தன் நீண்ட துதிக்கை நிறைய அந் நீரை முகந்துகொண்டு தன் பிடியானையை நோக்கி விரைந்து ஓடுவதைக் காணும் அவர், தாமும், பொருள் ஈட்டிய உடன் விரைந்து பொருளுடன் வந்து என்னை இன்புறுத்துவர் என்னும் துணிவுடையேன்; ஆதலின் ஆற்றியுள்ளேன்" (நற். 186) என்று விடையிறுக்கின்ருள்.

இவ்வாறு கூறி ஆற்றியிருக்கும் அவள், தலைவன் வாராது மேலும் நீட்டிப்பது கண்டு வருந்தி அவனையே நினைந்த நெஞ்சினை உடையளாய்த் தோழியை நோக்கித், "தோழி! என் நெஞ்சம், என்னெடு கூடி வாழ்தல் இன்றி, அவர்பால் சென்று அவருடன் இருத்தலின், அது மிகவும் நல்வினை உடைத்து; யானே, அந் நெஞ்சம்போன்று நல்வினை செய்திலேன்; ஆதலின், ஊரார் கூறும் அலர் உரை கேட்டு வருந்தி வாழ்கின்றேன்" (நற். 107) என்று வருந்திக் கூறுகின்ருள். நாள் பலவாகியும் தலைவன் வாராகுக, தன் நெஞ்சம்மட்டில் அவனை மறத்தல் இன்றி இருப்பதையும், தன் நலன் எல்லாம் கெடுவதையும் தோழிக்கு அறிவிப்பாள், "தோழி! தலைவன்பாற் சென்ற என் உள்ளம், அவர்க்குத் துணையாய் நின்று, வினையை முற்றுவித்து அவருடன் ஒருங்கு வர விரும்பி உளதோ? அன்றி, அவர் அருளாமையால் மீண்டு இவண் வந்து, பிரியுமுன் இருந்த நலம் கெட்டுப் பசலை பாய்ந்த என் உடலைக் கண்டு, 'இவள் நம் தலைவி அல்லள்; அயலிலாட்டி' என்று எண்ணி வருந்தி வேறிடம்

சென்றுவிட்டதோ? அறியேன்" என்று வருந்திக் கூறு கின்றாள்.

"சென்ற நெஞ்சம் செய்வினைக் குசாவாய்
ஒருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ?
அருளா ஞுதலின் அழிந்து இவண் வந்து
தொன்னலன் இழந்தவென் பொன்னிறம் நோக்கி,
ஏதி லாட்டி இவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே."

—நற். 56.

பிரிந்துறையும் தலைமக்களுக்கு, மாலைக் காலமும், மனக் கினிய காட்சிகளும் வருத்தம் விளைவிப்பனவாம். சோலை களில் நின்று தன் இனிய குரல் எடுத்துக் கூறுகின்றன குயி லினங்கள்; அக் குரல், தலைவிக்கு, நெடுங் காலத்திற்கு முன்னே உண்டாய புண்ணில் கூரிய வேற் படையைப் பாய்ச்சினாற் போன்ற துன்பத்தைத் தருகின்றது. தலை மக்கள் கூடி விளையாடுதற்கேற்பப் பளிங்கு போன்று தெளிந்த நீர் நிறைந்து ஓடும் ஆற்றைக் காணுகின்றாள். குயிலின் குரல் கேட்டு அடைந்த துன்பத்தைக் காட்டி னும் மிக்க துன்பத்தை அடைகின்றாள். மாலை நேரம் மகளிர் சூடிக்கொள்ளுதற்கேற்பப் பசுமையான குருக்கத்தி மலருடனே விரவிக் கட்டப்பெற்ற சண்பக மலர் மாலையை விலைக்கு விற்று வருகின்றாள் இளமகள் ஒருத்தி, அவளை ஆற்றை வெறுத்தலினும் மிகுதியாக வெறுக்கின் கிறாள் தலைவி (நற். 97.); இந்நிலையில் அவண் வந்த தோழியை நோக்கித் "தோழி! இம் மாலைக் காலம், இருள் மிக்க இராக் காலத்தே சேறு நிறைந்த தொழுவத்தினின்று நீக்குதலும் செய்யாது அத் தொழுவத்துள் கீழே படுக்கவும் விடாது நின்ற நிலையிலே நிற்குமாறு, தலைக்கயிற்றை இழுத்து உச்சி யிலே தூக்கி மேற் கைம் மரத்தில் இறுகப் பிணிக்கப்பெற்ற பசுவின் கன்று வருந்துவதைப் போல, யான் ஒருத்தியாகவே நின்று வருந்த வருத்துகின்றது" (நற். 109.) என்று கூறி வருந்துகின்றாள்.

இவ்வாறு வருந்துவாள், தலைவன் சின்னாள் நீட்டிப்ப னுயின் தான் இறப்பது உறுதி எனவும், அவ்வாறு தான் இறக்குங்காறும் வாராது பொருள் ஈட்டுவனுயின் அவன்

அறிவற்றவன் ஆவன் எனவும் கூறுவாள், "தோழி! தன எல்லா உறுப்பானும் மருந்தாய் உதவும் மரத்தின் பயனைப் பின்னும் வேண்டிய மக்கள், அது பட்டுப் போகும்படி அதன்பாலுள்ள மருந்து முற்றும் கொள்ளார்; மக்கள் தவம் செய்தற்கு நிலைக்களனாய தம் உடல வலி அனைத்தும் கெடுந் துணையும் தவத்தினைச் செய்யவும் மாட்டார்; அரசர், தம் கோல் உயர்தற்கு ஏதுவாய குடிமக்களின் வளப்பம் எல் லாம் கெடுமாறு, அவர்தம் இடத்து இருந்து வரிகளைக் கொள்ளுதலும் இலர். இவற்றையெல்லாம் அறிந்தும் நம் தலைவர், நம்மை ஈண்டே விட்டுப் பிரிந்தார் ஆதலின், அவர், தாம் பிரியாது உறைதலினாலேயே எம்முடைய உயிர் நிற் கின்றது என்ற உண்மையை அறிந்தவர் அலலர். இதுவே ஆடவர் இயற்கை என்பர் ஆன்றோர்." (நற். 226.) என்று கூறி வருந்துகின்றாள். வருந்திய தலைவி இறுதியாக, "இவ் வாறு, தம்மால் அன்பு செய்யப்பட்டாரது உயிர் நீங்கவும் பொருள் கருதிப் பிரிதல் ஆடவர்க்கு இயல்பு எனின், அரிது மன்றம்ம, அறத்தினும் பொருளே" (நற். 243.) என்று கூறி உளம் சலித்து உரையடங்குகின்றாள்.

இவ்வாறு, தலைவி ஆற்றாளாயினது கண்ட தோழி, தலை வியை நோக்கித் "தோழி! நீ நெடிது வாழ்வாயாக. முசி லும், நொச்சியும், முல்லையும் மலருமாறு கார்ப்பருவம் செய்யத் தொடங்கிவிட்டது. ஆதலின், தலைவர் மிகச் சேய் மைக்கண் உள்ள நாட்டினராயினும், நின்பால் பேரன்பினர் ஆதலின் நிலலாது வருவர்; அவர், தாம் கருதிய வினையை முடித்தலினால் நிறைந்த புகழைப் பெறுவதாயினும், இனி நில்லார்" (நற். 115.) எனவும், "தலைவர் சிறந்த அன்பினர்; அன்றியும் மெல்லிய இயல்பும் உடையவர்; ஆதலின், பிரிந் துறையும் நம்மைக் காட்டிலும் மிக வருந்தித் தாம் கருதிச் சென்ற அளவு பொருள் கைவரப் பெறாது ஒழியினும் நில் லாது வருவர்; அத்துடன் இம் மேகத்தின் இடியோசை இன் துணைப் பிரிந்தாரைத் தேடிக் கொணர்வதுபோல் உளது. ஆதலின் நீ வருந்தற்க" (நற். 208.) எனவும், "செறிந்த இருள் சூழ்ந்த நடு யாமத்தில், நம் தலைவரை உள்ளுந் தோறும், நன்மைதரும் குரலையுடைய பல்லி சுவரிலே பொருந்தி நின்று ஒலிக்கும்" (நற். 333.) எனவும் கூறித் தேற்றுகின்றாள்.

இவ்வாறு, தோழி, பலப்பல கூறித் தேற்றுவது கண்ட தலைவி, தோழியை நோக்கித் "தோழி! தலைவன் குறித்த காலத்து வாராழுயினமையின், என் தோள்களும் மெலிந்து பொலிவு குன்றின; அவன் வரும் வழியைப் பல்காலும் நோக்கி நோக்கி என் கண்களும் காணும் இயல்பை இழந்தன. நினைப்பு மிகுதியால் என் அறிவும் மயங்கி வேறுபட்டுவிட்டது; உயிர் போம் வழி, நோயையும் உடன்கொண்டு போவதல்லது அதைத் தனித்து விட்டுச் சேறல் இல்லையாதலின், இறக்கும் நிலையில் உள்ள என்னைப் பற்றியுள்ள நோயும் என்னை விட்டுப் பெயர்ந்துவிட்டது; பிரிந்தார்க்குத் துன்பத்தைச் செய்யும் மாலையும் வந்துவிட்டது. இனி என் நிலை என்னும்?—நான் இவ்வாறு கூறுவது கொண்டு தோழி! யான் இறப்பைக் கண்டு அஞ்சுகின்றேன் என்று நினையல்; சாதல் அஞ்சேன், ஆனால், இறந்து மறு பிறப்படைந்தால், அப்பிறப்பில், இப்பிறப்பில் என்னால் அன்பு செய்யப்பட்ட என் தலைவனை மறந்துவிடுவேன்கொல்? என்றே அஞ்சுகின்றேன்" என்று கூறித் தன் அன்பின் முதிர்ச்சியைக் காட்டுகின்றாள்.

"தோளும் அழியும் நாளும் சென்றென;
நீளிடை அத்தம் நோக்கி வாளற்றுக்
கண்ணும் காட்சி தெளிவின; என்னீத்து
அறிவும் மயங்கிப் பிறிதா கின்றே;
நோயும் பேரும்; மாலையும் வந்தன்று;
யாங்கா குவென்கொல் யானே? யீங்கோ
சாதல் அஞ்சேன்; அஞ்சுவல், சாவின்
பிறப்புப்பிறி தாகுவ தாயின்
மறக்குவேன் கொல்? என் காதலன் எனவே"

—நற். 397.

இவ்வாறு கூறும் தலைவி கூற்று,

"துறக்கப் படாத உடலைத் துறந்துவெந்
தூதுவரோடு
இறப்பன்; இறந்தால், இருவிசும்பு ஏறுவன்;
ஏறிவந்து

பிறப்பன் ; பிறந்தால், பின்னை வார்சடைப்
பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொலோ ? என்றுஎன் உள்ளம் கிடந்து
மறுகிடுமே."

என்ற நாவரசர் வாக்கை நினைப்பூட்டி, நினைக்குந்தோறும் கழிபெருங் களிப்பைத் தருவதாய் உளது.

இவ்வாறு, தன் அன்பின் முதிர்ச்சி காட்டி ஆற்றுளாய தலைவி, தலைவனும் அன்புடையன் என்பது நினைத்து, "என் தொல்கவின் தொலையவும் தோள்நலம் சாயவும் என்னை அளிக்காது சென்றார் ஆயினும், அவர் என்பால் அன்புடையர் ஆதலின், விரைந்து மீண்டுவந்து என்னை அளிப்பர்" (நற். 14.) என்று கூறி ஆற்றியிருக்கின்றாள்.

இவ்வாறு ஆற்றியிருக்கும் தலைவி மகிழத் தலைவன் வந்தானாக, அச் செய்தியைத் தலைவிக்கு அறிவிக்க விரும்பிய தோழி தலைவிபால் சென்று, "தோழி! கழன்று விழும் நின் தொடியைக் கண்டு நம் மகன் அழ, அவனுடைய அழுகுரலைக் கேட்டு உளம் மகிழ்ந்து அவனை அணைத்துக்கொள்ளும் நம்முடைய மனம் மகிழத், தலைவரும் வந்துவிட்டார்; இனி நீவிர் இருவீரும் இல்லறமாற்றி இனிது வாழ்வீராக" (நற். 212.) எனக் கூறுகின்றாள்.

பெரியோர்களே!

இதுகாறும், பாலை ஒழுக்கமாய, கொண்டு தலைக்கழிதல் முதல் பிரிவுவரையிலும் நிகழும் நிகழ்ச்சிகளை ஒரு கோவைபடுத்திக் கூறினேன். இனி, இதிற் காணப்பெறும் பண்டை வழக்காறு, உவமநயம், செய்யுளின் சிறப்பு இயல்புகள் போன்ற இன்னோரன்ன பகுதிகளையும் கூறிச் செல்லின் விரியுமென்றஞ்சி விடுத்துச் செல்லுகின்றேன். அறிவுடைப் பெருமக்கள், இன்னோரன்ன பல பகுதிகளை ஆராய்ந்து வெளியிட்டுத், தமிழ்நாட்டைப் பண்டை உயர்நிலையில் நிறுத்த முயல்வார்களாக!

---

# உ. மருதம்

[ வித்வான் அ. கு. ஆதித்தர் ]

## தோற்றுவாய்

இறைவன் அருளால் குறுமுனி தந்த தமிழ் என்று கூறுவது மரபு. குறுமுனி தந்த தமிழ் ஏட்டுருவமாய் நம் முன்னோர் கண்முன் நின்றது. அவ்வேடுகளைத் தாளுரு வாக்கி இன்று நமக்குத் தமிழ் தந்தவர்கள் ஆசிரியர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள். பத்துப் பாட்டு முழுவதும்; எட்டுத்தொகையுள் குறுந்தொகை, பதிற்றுப்பத்து, பரிபாடல், ஐங்குறுநூறு, புறநானூறு ஆகிய ஐந்தும்; ஐம்பெருங்காப்பியங்களுள் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை மூன்றும் இன்று நம் கையில் உலாவுவது முதுமுனியின் பொருள் கொடையால் எனின் மிகையாகாது. குறுமுனி தந்த தமிழை முடிமன்னர் அவைகொண்டு வளர்த்தது போல் முதுமுனி தந்த தமிழைத் "தென்னிந்திய தமிழ்க் கழகம்" என்ற சங்கங் கொண்டு, நெடுங்காலமாகப் பல மாணவருக்குக் கைம்மாறு கருதாது ஓதுவித்துத் தமிழ் உண்மையை அறிய ஊக்கியவர்கள், சான்றோர்குலச் செம்மல், கிறித்தியன் கல்லூரி முந்தைத் தமிழ்ப் பேராசிரியர் திரு. ச. த. சற்குணர், B.A. அவர்கள். நூல்வடிவிலும், உரைவடிவிலும் இவ்வாறு தனியிடங்களில் உலாவிய தமிழைப் பல்லோரும் உணர்ந்தின்புறப் பேரவை கூட்டிப் பொதுக் கேள்விக்கு இடமாக்கியும், மலிவாக நூல் வெளியிட்டு யாவரும் படிக்க வழிசெய்தும் வருபவர்கள் சென்னைச் சிந்தாதரிப் பேட்டைத் தமிழ்த் தேர்வுக் கழகத்தாரும், சென்னைச் சைவ சித்தாந்தக் கழகத்தாரும், சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தாருமாவர். திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, M.A., B.L. அவர்கள் முதல் முதல் பத்துப்பாட்டு இலக்கிய மாநாடு திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் நடத்தி வழிகாட்டினார்கள். பின்னர் அவ்வழியே சங்க இலக்கிய மாநாடு, கலித்தொகை மாநாடு, குறுந்தொகை மாநாடு, அகநானூறு மாநாடு நடைபெறலாயின. இன்று நற்றிணை

மாநாடு நடைபெறுகின்றது. இப் பெருங் குழுவில் உரை யாற்றும் பேறு யான் உற வழிசெய்த திரு. சுப்பையா பிள்ளை அவர்கட்கு என் நன்றி உரித்தாகுக. திரு. சற்குணர் அவர் களின் பாதம் பணியும் பெருமையில் சிறிதளவு உரிமை கொண்டவன் என்ற மதுகையுற்றே இம் மன்றத்தில் பேச முன்வந்தேன். என் உரையில் காணும் வழுவெல்லாம் அன் னார் அடியில் நெடுநாள் அமராக் குறையால் வந்தனவாகும்; சிறப்பெல்லாம் சான்றோர் காட்டிய முறையாகும்.

## அகப்பொருள்

தமிழ் இலக்கணத்தை அகம் புறம் என இரு கூறு படுத்தியுள்ளார் நம் முன்னோர். அகம் என்பது உள்ளத்துணர் வாய் நிற்கும் தலைவன் தலைவியர் தொடர்புபற்றிக் கூறு வது என்றும், புறம் என்பது போர், கல்வி, அரசு முதலிய வெளிப்படையான பொருள்பற்றிக் கூறுவது என்றும் பகர்வர். இஃதன்றி அகம் என்பது மனையறத்தை என்பதும் உண்டு. அகம் என்பது உள்ளமாயினும் சரி, இல்லமாயினும் சரி; அது வெளிப்படுத்துவது தலைவன் தலைவியர் தொடர்பு பற்றியே.

## நற்றிணை

எட்டுத்தொகை நூல்களுள் பதிற்றுப்பத்து, பரி பாடல், புறநானூறு நீங்கலாக, ஏனைய நற்றிணை, குறுந் தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஐந் தும் அகப்பொருள் பற்றியனவாம். இவ்வெட்டு நூற் களின் நிறுத்த முறையில் நற்றிணை முதல் இடம் பெறுகின் றது. இத் தலைமையிடம் நூற்சிறப்பால் ஏற்பட்டது என்று கூற இயலாது: நூல்கள் யாவும் சிறப்புடையனவேயாம். குறுந்தொகை, நெடுந்தொகை (அகநானூறு), நற்றிணை இம் மூன்று நூல்களும் தனித்தனி நானூறு செய்யுட்கள் கொண்டனவாய் அமைக்கப்பெற்றிருக்கின்றன. குறைந்த சீர்களையுடைய அடி குறளடி என்றும், மிகுந்த சீர்களை யுடைய அடி நெடிலடி என்றும், நேரிய அளவில் சீர்கள் கொண்ட அடி நேரடி, அளவடி என்றும் கூறப்படுவது போல ஒன்பது அடிக்குக் குறைந்த பாட்டுக்களின் தொகு திக்குக் குறுந்தொகை என்றும், பதின்மூன்று அடிக்கு மேற்

கொண்ட பாட்டுக்களின் தொகுதிக்கு நெடுந்தொகை என்னும் பெயர் கொடுத்து, இடையளவாய் நின்ற பாட்டுக்களின் தொகுதிக்கு நற்றொகை எனாது நற்றிணை எனப் பெயரிட்டிருக்கின்றனர். நூலின் பாட்டுக்களின் எண், நூலின் பெயர்களைக்கொண்டு, இவற்றைத் தொகுப்பித்தான் ஒருவனுகவே இருக்கலாம் என்று கருத இடந் தருகிறது. குறுந்தொகையைத் தொகுப்பித்தார் பெயர் தெரிதற்கில்லை. நற்றிணையைப் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியும், நெடுந்தொகையைப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும் தொகுப்பித்தார்களென வரலாறு அறிவிக்கின்றது. இவ்விரு பெயர்களும் இருவரைக் குறிப்பனவோ, அன்றி ஒருவரையே குறிப்பனவோ என்பதை ஆராய்ச்சித்துறையில் ஆர்வமுற்று உழைக்கும் அன்பர்கள் தெளிந்து அறிவிப்பார்களாக.

## எண் அமைப்பு

நெடுந் தொகையில் 2, 8 என வரும் எண்கள் குறிஞ்சி, 4 முல்லை, 6 மருதம், 10 நெய்தல், ஒற்றை யெண் யாவும் பாலை என ஒரு முறை கையாளப் பெற்றிருப்பதுபோல் குறுந்தொகையிலும் நற்றிணையிலும் முறைமை காண்டற்கில்லை. ஆயினும் நற்றிணையில் மருதம்பற்றி ஒரு முறைமை சிறு வழுவுடன் காணப்படுகின்றது. நானூறு பாட்டுக்களில் முழு எண்கள் நாற்பதாகும். அவற்றுள் 10, 110, 130, 140, 160, 190, 220, 240, 270 நீங்கிய முழு எண் செய்யுள்கள் யாவும் மருதம்பற்றி அமைந்துள்ளன. அவற்றுடன் 216 ஆகிய பின்னப்பட்ட எண் ஒன்றுமே மருதத்தைச சேர்ந்து, 32 பாடல்கள் மருதம்பற்றிக் கூறுகின்றன. முழு எண்கள் யாவும் ஆதியில் மருதம்பற்றி அமைந்து, பின்னர் மாறுபட்டிருக்கலாமோ, 216 மருதமாகியதும் பிந்திய நாள் மாறுபட்டிருக்கலாமோ என்பவைகளை ஆராய்ச்சியாளர் அறிந்து தெளிந்து வெளிப்படுத்துவார்களாக.

## காலம்

நற்றிணை நானூறு பாடல்களும் 175 பெரும் புலவர்களால் பாடப் பெற்றவை. அவற்றுள் மருதன் இளநாகனார் பாடிய 216-வது பாட்டில்,

"ஏதி லாளன் கவலை கவற்ற
ஒருமுலை அறுத்த திருமா வுண்ணிக்
கேட்டோர் அனையா ராயினும்
வேட்டோ ரல்லது பிறரின் ஞரே"

என்ற குறிப்பு இப் புலவர் கண்ணகி காலத்திற்குப் (சிலப்பதிகார காலம்) பிற்பட்டவர் என்று அறிவிக்கின்றது. சிலப்பதிகார காலம் கி. பி. 2 ம் நூற்றுண்டு என்பர் ஆசிரியர் உ. வே. சா. அவர்கள். அம் முறையில் இந்நூலும் இரண்டாம் நூற்றுண்டை யாதல், அதன் பிற்காலத்தையாதல் சாரும். இவ்வேட்டுச் சுவடியைத் தாளுருவில் நூலாக்கிய, பின்னத்தூர் திரு. அ. நாராயணசாமி ஐயரவர்கள் காலம் கி. பி. 1862 - 1914. தம் ஆயுளின் கடை யாண்டில் இவர்கள் இதனை உலகுக் கீந்து உதவினுர்கள்.

## ஐந்திணை

அகப்பொருள் இலக்கணம் ஐந்து திணைகளை யுடையது. நன்செய், புன்செய், கல்தரை, உப்பங்கழி, பொட்டல் என்பன நம் முன்னோர் இலக்கணத்தில் மருதம், முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை என்ற பெயர்கொண்டு வழங்கப்பெற்றன. இவை நிற்கும் முறை :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முல்லை | குறிஞ்சி | பாலை | மருதம் | நெய்தல் | 1 |
| குறிஞ்சி | நெய்தல் | பாலை | முல்லை | மருதம் | 2 |
| பாலை | குறிஞ்சி | மருதம் | முல்லை | நெய்தல் | 3 |
| குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் | 4 |
| குறிஞ்சி | பாலை | முல்லை | நெய்தல் | மருதம் | 5 |
| குறிஞ்சி | பாலை | முல்லை | நெய்தல் | மருதம் | |

(1) தொல். அகத்திணையியல் 5. (2) இறையனுர் அகப்பொருள் சூத்திரம் 1. உரை. (3) கலித்தொகை. (4) நாற்கவிராஜநம்பி. (5) தொல் அகத்திணையியல் 14, இறையனுர் அகப்பொருள் சூத்திரம் 1 ல் உரிப்பொருள் முறை. மேலும் உரையாசிரியர்கள் " இம் முறையன்றிச் சொல்லவும்படும் " என்பதால் ஐந்திணை முறைமைக்கு நியதி கிடையாது என்றறிகின்ருேம்.

## மருத உரிப்பொருள்

திணைகளுக்கு உரிப்பொருள் கூறுங்கால் மருதத் திணைக்கு ஊடல் குறிப்பிடப்படுகின்றது. ஏன்? மருத நிலப் பெண்கள் உழத்தியர்; நன்செய் நிலத்தில் வேலை செய்பவர்கள். தலைவன் மகிழ்நன்; ஊரன். நன்செய்யால் வளம் பெற்றிருக்கும் மகிழ்நன் உழத்தியருடன் பழக இடமேற்படுகின்றது. "போகம் புரக்கும் உழவர்" என்றார் மணிமேகலை யாசிரியர். இப் பழக்க முறையைக் கேள்விப்பட்ட தலைவி பொருளாய்த் தன் தலைவன் மீது முனிவு கொள்கிறாள். தன் மனைவி தன்னுடன் மட்டும் இன்புற்று வாழ ஆடவன் விரும்புவதுபோலத் தன் கணவனைத் தானே துய்த்து இன்புற எண்ணும் மாது, பிற மாது அங்கு இன்பந் துய்க்க எங்ஙனம் பொறுப்பாள்! இதனால் ஊடுகின்றாள்.

## பரத்தைமை

பிற மாதருடன் கூடிவருதல் ஒழுக்கத்திற்கு இழுக்கன்றோ? இதுவோ தமிழர் அறம்! எனின், இம்முறை யாவும் நாடக வழக்குப் பற்றி எழுந்ததாய்க் கொள்க. இன்று நாம் காணும் படக்காட்சிக் கதைகளுடன் வேடிக்கைக் கூத்து, பார்ப்போர் உள்ளம் களிக்குமாறு ஒரு பகுதியாய் அமைக்கப்படுவது போலப் பண்டைப் புலவர்களும் பல்வேறு துறைகளில் பாக்கள் எழுதினர். அவற்றுள் பரத்தையின் சேரிக்குத் தலைவன் செல்வதும், அதை அறிந்து தலைவி ஊடி நிற்பதும், அதைச் சிலர் தேற்றுவதும் ஒரு சிறு பகுதியாம். இதனால் ஆடவர் யாவரும் பரத்தைமை கொண்டனர். பரத்தைமை வாழ்வின் நாகரிகத்தில் ஒரு பகுதி என்று கோடல் தவறாம். நச்சினார்க்கினியர் (தொல், களவியல், 20) தம் உரையில் "அவன்கண் பரத்தமை யின்றேனும் காதல் மிகுதியால் அங்ஙனங் கருதுதல் பெண் தன்மை" என்று அழகுபெறக் குறிப்பிட்டிருக்கின்றார். ஆயின் தமிழ் நாட்டில் பரத்தைமை கிடையாதோ என்னின், நாம் கூறுவதொன்றுண்டு: எந்நாட்டில் பரத்தைமை இல்லை? என்று கேட்கின்றோம். "இமையோர் தேயத்தும் எறிகடல் வைப்பினும் அவையில் காலம் இன்மையான" (தொல். பொருளியல், 54), "காமப்பகுதி கடவுளும் வரையார்" (தொல், புறத்திணையியல், 28) என்று உண்மை

இயல்பை உணர்த்திய தொல்காப்பியரின் பெருமை தான் என்னே! பரத்தைமை தமிழ் மக்கள் வாழ்க்கை நாக ரிகத்தில் ஒரு பகுதியா யிருந்திருப்பின் வள்ளுவப் பெருந் தகையார் பொருட்பாலில் அரசு, அமைச்சு, குடி, கூழ், அரண் என அமைத்தது போன்று காமத்துப்பாலில் பரத் தைமை என ஒரு பகுதி அமைத்திருப்பா ரன்றோ! "பரத்த, நின் மார்பு" என்று தலைவனைக் குறிப்பிடப் பெறும் ஓர் இடந் தவிர; பரத்தையர் எனப் பெண்பாலார் ஒரு தனி வகுப்பினராய் இருந்ததாய்க் கொள்ளவோ, ஆண் மக்கள் பரத்தை உறவு கொள்ளல் நாகரிகமாகக் கொண்டனர் என்று கருதவோ இடமில்லையே! குறளின் "வரைவின் மக ளிரும்" நாலடியாரின் "பொது மகளிரும்" நீத்தார் பெருமை, கற்புடை மகளிர் என்ற அதிகாரங்களைப் போல அவ்வியல்பைக் கொண்ட தனிப்பட்ட மக்களைக் குறிப்ப னவே யன்றி அவ்வியல்பு கொண்ட ஓர் இனத்தாரைக் குறிப்பதாய்க் கோடல் ஒவ்வாததாகும். இதனால் பரத்தை மைப்பகுதி மனக் களிப்பிற்காக நாடக வழக்காகத் தோன் றியதாக உணர்க.

மேலும் "அவள் நல்லள்" எனப் பொதுப்பட நிற்கும் பாக்களுக்கெல்லாம் உரையாசிரியர்கள் தாம் பல இலக் கணத் துறையுடன் திறம்படப் பொருள் கூறுவதாக எண்ணி 'விறலி நல்லவள், பரத்தை நல்லவள்' என்று பொருள் நாட்டி வைத்திருப்பதால் நம் கருத்து பரத்தைமை உண் மையில் சிறிது ஆழ்ந்து பதிகின்றது. இது உரையாசிரியர் களால் தமிழ் இலக்கியத்திற்கு வந்த ஒரு இழிவேயாகும். தொல்காப்பியர் காலத்திற்குப் பலகாலும் பிந்தியவை சங்க நூல்கள்; சங்க நூல்களின் காலத்திற்குப் பல காலம் பிந்தி யவர்கள் உரையாசிரியர்கள். பிந்தியோர் தம் தம் கால இயல்பை ஒட்டி முந்தியோர் நூலுக்கு உரை எழுதிச் சென் றுள்ளார். ஆயிரம் ஆண்டுகளுக்கு நாகரிகம் ஒரே முறைத் தாய் நிலைகொள்ளும் என்று நாம் எண்ணல் தவறாகும். தொல்காப்பியத்தில் பரத்தைமைபற்றிக் கூறிய பாகம் ஒரு சிறிதே; பிந்தியோரின் அகப்பொருள் விரிவிலும் இலக்கிய உரையிலும் பரத்தைமைப்பகுதி மிளிர்கின்றது. இது இடைக் கால நாகரிக மாறுபாட்டால் வந்ததாகும். திணை, துறை களைக் கருதாது, சொற்பொருளை ஆராய்ந்து வாழ்வு முறை

யின் சிறப்பியல்பைக் காணவேண்டியது கற்போர் கடமையாகும்.

## உரிப் பாகுபாடு

இருத்தல், புணர்தல், பிரிதல், இரங்கல், ஊடல் என ஐவகையாகப் பிரிக்கப்பட்டது உரிப்பொருள். இற்றை நாள் பெரும்பாலும் நாம் காலை மணி 6–9 வரை மனை வினையும், 9-4 வரை வெளி வினையும், 4-8 வரை உலாவியலும், 8-9 வரை ஊடல் உசாவல் உணவும், 9க்கு மேல் அடங்கலும் அமைந்த ஒரு நெறி கொண்டிருப்பது போன்றே, நம் முன்னோரும் ஒரு பாகுபாட்டை நிலம் காலம் தொழில்களின் இயல்பை மனத்தில் வைத்துக் கற்பனைசெய்து இலக்கியமாக நாட்டினர். அவர்தம் கூரிய மதி வியக்கத்தக்கது! மருத நிலத்திற்குத் தெய்வம் போகியாகிய இந்திரன் என்றும், காலம் வைகறை என்றும், உரிப்பொருள் ஊடல் என்றும் கூறப்படும்.

வாழ்வில் ஊடல் தேவையோ என ஆராயின், தேவையில்லா ஒன்றும் ஆண்டவன் படைப்பில் அமைந்திராது என்று புலப்படும். மலருக்குப் புறவிதழும், மேனிக்குத் துகிலும், கூடலுக்கு ஓர் ஊடலும் சிறு முன் திரையாக நின்று இன்பத்தின் ஆர்வத்தைப் பெருக்குகின்றன. ஊடல் என்பது சிறு முனிவு. இது தலைவன் தலைவி இருவருக்கும் பொது. மீண்டும் மீண்டும் தான் வேண்டி நிற்பதைப் பொருட்படுத்தாமல் தலைவி பெரும் பிடிவாதங் கொள்கிற காலத்தும், தாம் இருவரும் ஒத்துச் செய்திருந்த குறிகள் தவறி அதற்கு மாறாகத் தலைவி நடக்கின்றதாகத் தோன்றிய காலத்தும் தலைவன் மனம் வருத்தத்தால் வெம்புகின்றது. தலைவனிடம் பரத்தைமை யுண்டென்று எண்ணி அதை ஒழிப்பதற்காகவும்; தன் அன்பின் மிகுதியால் மடமை வளர அவன் செய்கைகள் தனக்கு ஒவ்வாதனவாய்த் தோன்றுமிடங்களிலும் தலைவி ஊடுகின்றாள். (தொல். கற்பியல். 15, 17) "அன்பிலை, கொடியை என்றலும் உரியள்" என்றார் தொல்காப்பியனார். வள்ளுவப் பெருந்தகை

> **வழுத்தினாள், தும்மினேனாக அழித்தழுதாள்**
> **யாருள்ளித் தும்மினீர் என்று.**

துய்ப்புச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ என்று.

என்று கூறிய வாக்கு மாதர் மன இயல்பை நன்கு விளக்கி நிற்கும் நாடகமாகும். தம் கணவரைத் தாமே தனிப் போகமாய் இன்புற்று நுகர்ந்து இரண்டற நிற்க விரும்பும் தமிழ்ப் பெண் மக்களின் அன்பின் பெருக்கையும், அதன் வழிப் பிறக்கும் மடமையையும் தூய வாழ்வு நடாத்த விரும்பும் யாவரும் போற்றுவர். தூய வாழ்வு நடாத்துவோர் தாமும் எய்துவர்.

இந்தஇப் பிறவிக் கிரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்தவார்த்தை திருச்செவி சாற்றுவாய்.

என அநுமானிடம் சீதை கூறியதன்கண் தோன்றும் மனப் பான்மை என்ன? அவனைத் தனக்குப் பின் மற்றொருவர் நுகரப் பொறுமை யன்றோ! அன்பின் மிகுதி, அறிவைக் கெடுக்கும்; பூசல் விளைவிக்கும்; கூடல்வேண்டிய இடத்தில் ஊடல் தரும்; அதனால் நாணும் நாடலும் மிகைபடச் செய்யும். ஊடலின் அடிப்படை பரத்தைமையா அன்பின் அறியாமையா? யாது சொல்வது?

வளைபயில் முன்கைஓர் மயிலனாள் தனக்கு
இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்
முளையயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள உதிர்ந்தது கலைக்கண் ஆலியே.

என்ற கம்ப நாடர் வாக்கு ஊடலின் சிறப்பையும், அதன் அடிப்படை எத்துணை உண்மைப் பொருள் கொண்டுள்ளது என்பதையும் நன்கு விளக்கும். பரத்தைமை அன்று; ஒருத்தர் மீதுற்ற அன்பே ஊடலின் காரணமாம்.

" தரைமகளும் தன்கொழுநன் உடலந் தன்னைத்
தாங்காமல் தன்கரத்தால் தாங்கி, விண்ணோட்டு
அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவிஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின் "

என்ற சயங்கொண்டார் வாக்கு மாதர் மனப்பான்மையை நன்கு விளக்குகின்றது. இத்தகைய இயல்புடையார் ஊடுவது வியப்பன்றன்றோ!

Love and lordship like no fellowship. There can't be two queens in the kingdom of mind என்னும் பிறமொழிகள் தமிழ் மாதர், மாதரின் உணமை உணர்ச்சி பெற்றவர், உண்மையை ஓதுவது தமிழ் இலக்கியம் எனச் சான்று பகர்கின்றன. இனி நற்றிணையின் ஊடலழகுபற்றி வரைவாம்.

## தலைவி ஊடல்

தலைவி கூறுகிருள் :—அவரை முயங்கப் பெருமல் சுணங்கு பூத்து நான் வருந்த, அக் குறுமகள் அவருடன் இன்பம் துய்த்துக் கூந்தல் துவள, கலிங்கம் உடுத்து, வளை யல் ஒலிக்க, நிமிர்ந்து பார்த்துச் செம்மாந்து செல்கின்ருள். அவள்தான் வாழ்க ! (20)

ஒருநாள் விழாவில் விறலியைக் கண்டு :—அதோ தழை உடுத்து விழாவிற்கு வந்துவிட்டாள் குறுமகள். நம் நாயக ரைக் கவனித்துக்கொள்ளுங்கள். ஐயோ, இவள் ஒருத்தி செய்கையை நாம் எத்தனை பேர் சேர்ந்து எதிர்க்க வேண்டிய தாகிறது ! (170)

பரத்தையை எண்ணி வெகுண்டு :—அவனை இங்கு வந்து வாழ்வு நடத்த விடுவேனே ? அவள் நெஞ்சில் உண்மை உண்டோ ! உணர்ச்சி உண்டோ ! அவளும் என்னுடன் உறைந்து பிள்ளைகள் பெற்று வாழுவோ ! (330)

தலைவனைச் சினந்து :—பாணர் தெருவில் நீர் செல்லும் போது, அச் சிறுக்கியர் உம்மைச் சூழ்ந்து நின்று தொட்டு ஈர்ப்ப, நீர் அங்கும் இங்கும் அல்லாடி நின்ற நிலையைப் பார்த்தேனே ! ஐயோ ! பார்த்து என் செய்ய ? வெயில் காய்ந்து வெடித்த நிலத்தில் புது வெள்ளம் வந்து பாய்ந் தாற்போல், உம் வரவைக் கண்டால் என் மனம் குளிர்கிறது. என் செய்ய ? நீரோ இங்குத் தங்கீர் ! அச் சிறுக்கியை விட முடியுமா ? பரத்தையைச் சேர்ந்து வந்திருக்கிறீர். சார்த்திக் கழித்த பாண்டம் ! இங்கு ஏன் வரவேண்டும். அங்கு அவ ளோடு இருக்கிறது தானே, நாடோறும் புதுப்புது மலர்தேடி உட்காரும் வண்டு ! மதயானை தன்மேல் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்கிறதுபோல, ஊரெல்லாம் பழி சொல்லும் முறையில் நடக்கிறவர் இங்கு வரவேண்டிய

தில்லை. என் கைவளையல்களைத் தளரச்செய்த நீர் வருவதும் ஒன்றுதான், வராமையும் ஒன்றுதான்! நான் உமக்கு ஒன்றும் செய்தற்கில்லை. நிரம்ப விரும்புபவர்போல வருகிறது ஏன்? எத்துணைச் சிறப்புடன் வாழ்ந்தவள் யான்! என் கூந்தலில் ஒரு மலர் வைத்து மணம்பார்க்க வழியில்லையே. இப் பாவியின் கொடுமையை நான் மறக்க முடிகிறதில்லையே! (30, 230, 350, 360, 340, 260)

குருகைப் பார்த்து :—ஏ குருகே, நீ என் ஊர்க் குளத்தில் இரையுண்டு அவர் ஊர்க்குச் செல்கின்றனை. என் கை மெலிந்து, வளையல்கள் நெகிழ்ந்து நான் வாடுவதை நீ அவருக்குச் சொல்லாதது ஏனோ! இதுவோ என்மீது நீகொண்ட அன்பு! இன்றேல், என்னை மறந்தனையோ? (70)

குயவனைப் பார்த்து :—ஏ குயவா, நீ போகும் இடங்களில் இப் பாணன் கூறுவது முழுவதும் பொய் என்று அறிவி. அவன் பொய்யன். அவன் பொய்ம்மையை உலகு அறியட்டும். (200)

பாணனைப் பார்த்து :—ஏ பாண, நான் நெய் அணிந்து புனிற்று நாற்றத்துடன் இருக்கின்றேன்; அவருடன் உறைவதற்கில்லை. வீணே மன்றாடாதே. செல். பயனற்ற பேச்சு வேண்டா. (380)

தோழியைப் பார்த்து :—தோழி, அவர்தம் பரத்தைமைப் போக்குத் தெரிந்திருந்தும் என்னை அவருடன் உறவு கொள்ளச் சொல்கின்றனையே. வருவிருந்தைக் கவனிப்பதே போதுமானதா யிருக்கின்றது! அவருடன் இருக்க ஓய்வு ஏது! (280)

நாயகனைக் கண்டு :—நீர் என்னதான் செய்தாலும் உம்மைப் பிரிந்து என்னால் தனித்திருக்க முடிகிறதில்லை. நீர் இல்லாத இடம் பொல்லாத விடமாகத் தெரிகிறது. என்னை அணைந்த உம்மை எவ்வாறு மறக்க இயலும்! நீர் இல்லை எனின் எனக்கு இங்கு என்ன உண்டு? உம்மை மறந்தறியேன். உம்மைக் காண்பதே எனக்கு ஒரு மகிழ்ச்சி. உம் காட்சி ஒன்றே போதும். நீர் இல்லாத வேளையில் நான் படுந் துயரம் எல்லை கடந்தது. பலர் அதனைக் கண்டு இரங்கினும் பயன் யாது? நைந்து வருந்துபவள் நான் அன்றோ! (216, 400)

இக் கூற்றுக்களால் தலைவியின் முனிவும், அம் முனிவு அன்புபற்றி எழுந்தமையும், அம் முனிவுக்காலத்தில் பாணன், தோழியர் தேற்றலும், முடிவில் தலைவனைச் சார்ந்து இன்புறலும் வெளியாகின்றன. இடித்து மழை பொழிவது போல் தலைவி சினந்து தணிந்து அணைந்து நிற்கும் நாடகத்தை உன்னி உணர்க.

## தோழி ஊடல்

தோழி தலைவியைப் பார்த்து:—அடீ, தனக்கு ஒரு குழந்தை பிறந்துவிட்டது; அப்பா பேர் சொல்வதற்குப் பையன் வந்துவிட்டான் என்ற மகிழ்ச்சியில், நள்ளிரவில், யாவரும் உறங்கும் நேரத்தில் கள்ளன்போல மெல்ல வந்தார். அவர் ஆசையைப் பார்த்தனையோ? (40)

நான் விழாவிற்குச் சென்றேன். வழியில சந்துத் திருப்பத்தில் அவரும் வந்திருக்கிறார்; ஒருவரையொருவர் எதிர்த்துக்கொண்டோம். "உம்மைத் தட்டிக் கேட்பார் உண்டோ இல்லையோ, ஒழுங்காய்க் காலம் தள்ளுகிறது தானே" என்றேன். "இதோ பார். மேல் எல்லாம் சுணங்கு" என்று காட்டிப் போய்விட்டார். அவர் பெருங் குணத்தைப் பாராட்டாமலிருக்க முடியுமா? (50)

அடி நீ எல்லாம் அறிந்தவள். அவரை எண்ணி வருந்துதல் தகாது. ஆடவர் யாவரும் வண்டு அனையர். இது தெரிந்து நீ மனங் கவல்தல் ஒழிப்பாய். அவர் விரும்புங்கால் நீ மிஞ்சுகின்றாய்; நீ விரும்பினால் அவர் மிஞ்சுகின்றார். நான் இறந்த நாளிலேதான் நீங்கள் சேர்ந்து மகிழ்ந்து வாழ்வீர்கள்; நான்தான் உங்கள் பூசலுக்கெல்லாம் காரணம். (290, 180)

விறலியைப் பார்த்து:—ஏ விறலி, நீ அவருக்குப் பல பல சொல்லிப் பரத்தையிடம் கொண்டு சேர்க்கின்றாய். அவள் அம்மாவிடத்திலும் பலபல பேசி யாரையும் உறவு ஆக்கினை. (310)

உழவனைப் பார்த்து:—உழவா, நீ நாற்று நடும்போது ஆங்குள்ள நெய்தல் கோரைகளைப் பிடுங்கிவிடாதே. அவை வளரட்டும்! எம் தலைவிக்கு அணியாக அவை வேண்டியவாகும். (60)

தலைவனைப் பார்த்து:—ஐய, உம் செல்வமும் பெருமைகளும உமக்குச் சிறப்பாகா. உம்மை நம்பினோர்மீது நீர் காட்டும் கண்ணோட்டம் ஒன்றே செல்வம் என்று கூறத் தக்கதாகும். சான்றோர் ஒப்பும் செல்வம் அஃதே ஆதலின் தலைவியைக் கைவிடாது தழுவி வாழ்வீர். (210)

இவ்வாறு தோழி தலைவிக்கு அறவுரை கூறியும், தலைவனைப் புகழ்ந்தும், உலகியல் ஓதியும், தலைவனை நொந்தும், தலைவியால் இரங்கியும் நாடகம் நடத்துகின்றாள்.

## பரத்தை ஊடல்

தன்னைப் புகழ்ந்து :—நான் தழையுடை யணிந்து தெருவில் சென்றால் எந்த ஆடவனாவது என்னைத் தொடராமல் ஆங்கு வதிவானோ? மகளிர் யாவரும் வருந்தி நிற்கவேண்டியதுதான்! (320)

பாணனைப் பார்த்து :—பாணா, இப்போதுதான் ஊரன் வந்து, வண்டியை நிறுத்திவிட்டு வெளிச்செல்கின்றான். அதற்குள் நீயும் வந்து இறப்பைப் பிடுங்கி நிற்கின்றாயே. ஏன்? அவர் மாலை தந்து அன்புகாட்டியது என் மனத்தை விட்டகலாதிருக்கிறது. இப்பொழுது பிரிந்து விட்டாரே! எனக்கும் வருத்தம், அம்மாவுக்கும் கோபம். ஆயினும் அவரை வரும்படி சொல். (300, 150)

விறலியைப் பார்த்து :—அடியே, ஒரு காரியம; சிரிக்க வேண்டியதைத் தவிர வேறு என்செய்ய! அவர் என் தலைமயிரைப் பிடித்திழுத்து, என் கை வளையலையும் கழற்றினார். நான் கோபங் கொண்டவள்போல் முகங் காட்டி, "சரி சரி; உம் மனைவியிடத்தில் எல்லாம் சொல்லிவிடுகிறேன்" என்றேன். அப்பொழுது பார்க்கவேண்டும் அவர் நிலையை! மன்னர் முன் பொருநர் மத்தளம் அலறுவது போல நடுநடுங்கி என்னென்னவோ பேசினார். பார் அவர் வீரத்தை! (100)

இவ்வாறு பரத்தை தன்னைப் பாராட்டியும், பாணனை வெகுண்டும் நயந்தும், தலைவனை வியந்தும் அச்சுறுத்தியும் நாடகம் நடிக்கின்றாள்.

## தலைவன் ஊடல்

யாரும் அறியாமல் விடியற் காலங்களிற் சென்று அவளுக்குக் கண்ணியும் மலரும் கொடுத்து வந்தேன். அதனை எண்ணி மகிழ்ந்து, என்னை விரும்பி அவள் தை நோன்பு ஆற்றி வந்தாள். அவளைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியுமோ! என் மனக் கவலை தீர்க்கும் மருந்து அவள் தான். (80)

என்னோடு முனிவுற்றிருந்த அவள் விருந்து வந்ததும் இலையை அறுத்து ஒழுங்கு பண்ணினாள். சமையலறைக்குட் சென்று வேலையைத் தொடங்கினாள். நெற்றி முழுவதும் வியர்வை அரும்ப, அதையும் தன் முன்தானையில் துடைத்துக் கொண்டாள். நான் சென்று அங்கு உற்று நோக்கினேன். என்ன இளஞ் சிரிப்பு! இப்படி ஒரு விருந்து நாடோறும் வந்தால் நன்றாயிருக்கும். பிணக்கு என்பதே அங்குத் தோன்றாது. மனை நிறைந்த வாழ்வாயிருக்கும். (120)

பாணா, ஒரு வார்த்தை கேட்டனையோ? பையனையும் கையில் பிடித்துக்கொண்டு ஊடல் தீர்க்கும் எண்ணத்துடன் மெல்ல அருகில் சென்றேன். "யார் அது, எம்மைத் தீண்டாதீர்" என்று மெல்ல, யான்பிணை போல அயலில் விலகிச் சென்றாள். மற்றொரு குறிப்பு, சிரிக்க வேண்டியது தான்! கருவுயிர்த்துப் படுத்திருந்தாள், அருகில் சென்றேன். "ஓ! இனி முதுமை யுற்றவளாயினாய், தாய் ஆகிவிட்டாய்" என்று வயிற்றைத் தடவினேன். எட்டிப் பார்த்து நாணிக் கண்களைக் கையால் புதைத்துக்கொண்டாள். முகம் மட்டும் மலர்ந்து விளங்கிற்று. (370, 250)

இவ்வாறு தலைவன் தலைவியிடம், எண்ணியும் பார்த்தும தொட்டும் இன்புற்று நாடகம் நடத்துகின்றான்.

## பொதுமை ஊடல்

தழை யணிந்து அவள் தெருவில் வந்தால் பெண்டிர் யாவரும் தம் கணவருக்குக் காவல் அமைக்க வேண்டியவராகின்றனர். ஊர, உன் பட்டமும் வண்டியும் ஒரு சிறப்பாகுமோ; உன்னை நம்பியிருப்போரின் துன்பத்தை

அகற்று, அதுவே சிறப்பு; அதுவே சான்றோர் மதிக்கும் பெருஞ் செல்வம். (210)

அவள் ஊஞ்சலுக்கு வந்து ஆடாமல் அழுது திரும்புகின்றாள். அவளை வினவுவார் இல்லை. நல்ல ஊர்! நல்ல முறை! என்று சில பாக்கள் பலர் கூற்றாகவும் பொருந்தும் முறையில் அமைந்திருக்கின்றன. (90)

## நற்றிணை மருதம் பாடிய புலவர்கள்

பரணர் 100, 260, 280, 300, 310, 350.
ஆலங்குடிவங்கனார் 230, 330, 400.
பல்கண்ணனார் 200, 380.
ஓரம்போகியார் 20, 360.
மருதன் இளநாகனார் 216, 290.
கபிலர் 320.
நக்கீரர் 340.
ஔவையார் 390.
வெள்ளி வீதியார் 70.

பிற 11 புலவர்கள் தனித்தனிப் பாடல்கள் தந்துள்ளார்கள்.

## சில குறிப்பான பெயர்கள்

மூதூர், வெண்ணி, முள்ளூர், இருப்பையூர், ஊணூர், சிறுகுடி, உறந்தை, அழுந்தூர், மலையன், அன்னி, காரி, ஓரி, வழுதி, செழியன், விரான், கிள்ளி, முடியன்.

## உவமம்

க. பாணர் தெருவில் சிறுக்கியர் பலர் தலைவனைப் பிடித்து இழுக்கின்றார். அங்கு அவனுறு அல்லல் நிலை கப்பல் கவிழக் கடலில் பலரால் கைப்பற்றப்படும் மரத்தை ஒக்கும். உ. நாரையின் நிறம் துறையில் நன்றாய் வெளுக்கப்பெற்ற துணியை ஒக்கும். ௩. வண்ணாத்தியின் ஓய்வில் உழைப்புக் கை கொடையாளர் கையை ஒக்கும். ௪. நீரில் ஆம்பல் பூத்து நிற்பது கொக்கில் அலகையும் தலையையும் ஒக்கும். ௫. தலைவி பெயரைக் கேட்டதும் தலைவன் நடுங்குதல், மலையன்முன் நிற்கும் பொருநர் மத்தள நடுக்கத்தை ஒக்கும். ௬. ஒரு பரத்தையை அஞ்சிப் பலர் தம் கணவரைப் பேணுதல்

மலையனின் ஒரு வேலுக்கு அஞ்சிப் பகைவர் பலர் ஓடுவதை ஒக்கும். ௭. முயிற்றுக்குடம்பை உதிர்ந்துகிடத்தல் செந்நெல் அரிசியை ஒக்கும். ௮. நெடுந்தெரு ஆற்றினை ஒக்கும். ௯. தாமரை இலை யானைச் செவியை ஒக்கும். ௧௦. ஆம்பல் கொக்கின் கூம்புநிலையை ஒக்கும். ௧௧. தலைவன் செயல், வண்டின் செயலை ஒக்கும். ௧௨. சேரியில் இறப்பைத் தொட்டு நிற்றல் யானை நிலையை ஒக்கும். ௧௩. செந்தாமரை மலர், விளக்கு அடுக்கத்தை ஒக்கும். ௧௪. உள்ளீடு இல்லா உரை மத்தளத்தை ஒக்கும். ௧௫. பரத்தையைத் துய்த்து வரும் தலைவன் சார்த்திக் கழித்த பாண்டத்தை ஒக்கும். ௧௬. புதிய பரத்தை விழாக்காலத்தில் ஆடும் விறலியை ஒக்கும். ௧௭. வாளைமீன் பிறழ்வது வாள் சுழல்வதை ஒக்கும். ௧௮. தலைவன் தகாதன புரிந்து பழிக்குள்ளாதல் யானை தன் தலைமேல் மண்ணை வாரிப்போடலை ஒக்கும். ௧௯. சினந்த அரசகுமாரியிடம் தோழியர் அடிபணிந்துநிற்பது தாமரை அடியில் ஆம்பல்கள் தாழ்ந்து நிற்பதை ஒக்கும். இத்தகைய இயற்கை உவமங்கள் பல நற்றிணையில் மிளிர்கின்றன.

## பழக்க வழக்கங்கள்

பாணர்சேரி இசை நிறைந்து விளங்கும். தெருக்களில் ஊர்மக்கள் பார்த்துக் களிக்கத் துணங்கைக் கூத்து நடைபெறும். மாதர் விழாக்காலங்களில் தழையுடை யணிந்து வெளிவருவர்: இது ஆடவர் அறிவை மயக்கி நிற்கும். கலிங்கம் உடுத்தல் உயர்ந்தோர் அணி. தெருவில் மங்கையர் ஊஞ்சலாடிக் களிப்பர்.

பெண்கள் தாம் விரும்பிய காதலரைப் பெறத் தை நோன்பு புரிவர். விருந்தோம்பலை எக்காரணங் கொண்டும் நழுவவிடாது இல்லறம் நடத்துவர்; தம் கணவர் பிறர் மனை செல்லப் பொறார், அவரைத் திருத்துவான்வேண்டிப் பிணங்கி நிற்பர்; பிறர்மூலம் தம் கவலையைக் கணவருக்கு அறிவுறுத்துவர்; பட்டம் பதவிகளினும் நல்லொழுக்கமே சாலச் சிறந்தது என அறவுரை கூறுவர்; கணவர் தம்மைப் பிரிந்திருத்தலைப் பொறார். புனிற்றிளங் குழந்தை செவிலியுடன் தூங்கும்; தாய் நெய் தோய்ந்தஆடையுடன், வெண் கடுகு மருந்து கொண்டவளாய்த் தோற்றக்குறைவுடனிருப்பாள்; மாதர் அக்காலங்களில் மங்கல முறைகள் சில கையாள்வர்.

தலைவன் தனக்கு மகவு பிறந்த செய்தி கேட்டதும் மனையாளைப் பார்க்க ஆவலுடன் மனைக்கு வருகிறான். தன் மகனுக்குத் தன் தந்தையின் பெயரை யிடுகின்றான்; தன் குறைகள் தன் மனைவிக்கு எட்டாதிருக்க விரும்புகின்றான்; அவட்கு அஞ்சுவதுமுண்டு; அவள் நன்மதிப்பைப் பெற அவன் விழைகின்றான்.

உழவர்கள் அதிகாலையில் வயலுக்குச் செல்வார்கள். அந் நேரங்களில் தலைவர்கள் தலைவியருக்கு யாருமறியா முறையில் பூவும் கண்ணியும் கொண்டு கொடுப்பர். குற்றம் பொறுத்தல் என்னும் குணத்தைக் கைக்கொள்ளும்படி தலைவன் தலைவியருக்கு அவர்களுக்கு வேண்டியவர்களால் அறிவுறுத்தப்பெறும். இத்தகைய வழக்கங்கள் பல இருந்தனவாக நற்றிணை மருதம் அறிவிக்கின்றது.

## மருதத்துக் கருப்பொருள்

குளத்தில் நிறைநீரும் செவ்வாம்பலும் தாமரையும் அழகுபெறத் தோன்றும். ஆங்குச் சிறுமீன்கள் மின்னுவதுடன் வாளைமீன்கள் துள்ளிப் பாயும். தாமரை இலைகள் 'பசேர்' எனப் படர்ந்திருக்கும். கொக்குகள் கூம்பியிருந்து மீன்களைப் பிடித்துச்செல்லும். எருமைக்கடாக்கள் குளத்துள் பாய்ந்து நீந்தித் தம் களைப்பை ஆற்றும்; ஆங்குள்ள செங்கழுநீர் இலைகளைத் தின்னும். அயலிலுள்ள பழுமரங்களிலிருந்து பழங்கள் குளத்தில் விழும். இவ்வாறு குளம் வளம்பெறும்.

வீடுகளின் முற்றங்களில் கன்றுகள் வரிசையாகக் கட்டப்பெற்றிருக்கும். அவைகள் செங்கழுநீர், நெய்தற் பூக்களைத் தின்னும்; அவை தின்று மீந்து கிடப்பதை உழுது திரும்பி வரும் எருமைகள் தின்னும். எருமைகளை மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்லும்பொழுது சிறுவர் அதன் முதுகில் ஏறிக் கொள்வர்: வயலிலிருந்து மீளும்போது உழவர் தம் வட்டிகளில் மீன் கொண்டு வருவர்.

வெளியில் மணற் பரப்பில் நெற்கூடு வைத்திருக்கும்: இந் நெற்பயிர் வாழைமரத்துயரம் வளர்வது முண்டு. உழைத்த எருமைகள் ஆங்கண் மருத மரத்து நிழலில் படுத்திருக்கும். நெல் அரிபவர் பறை ஒலி கேட்டுப் பறவைகள்

கலந்து பறந்து செல்லும். இத்தகைய வளங்களை மருத நிலம் கொண்டுள்ளது.

## திணை மயக்கம்

தொல்காப்பியம். அகத்திணையியல் கடு "உரிப்பொருள் அல்லனமயங்கவும் பெறுமே" என்று கூறுகின்றது. இதனால் உரிப்பொருள் மயங்கலாகாது என விளக்கமாகின்றது. அகத்திணை கச "திணைமயக்குறுதலும் கடிநிலை யிலவே" என்று கூறுவதால் ஐந்திணைகளும் தம் முதற் பொருள் கருப் பொருள்களில் மயங்கி வரலாம் எனக் கொள்ள வேண்டியவர்களாகின்றோம். தொல்காப்பிய ஆசிரியர் காலத்துக்குச் சில ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்ட ஆசிரியர்கள் இக் கருத்தை ஏற்று நின்றதாகத் தெரிகிறதில்லை; "சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும்" என்றும், "உரிமயங்கி வருதல் கலி முதலிய செய்யுளகத்துக் கண்டு கொள்க" என்றும் உரை ஆசிரியர்கள் கூறுவது தொல் ஆசிரியர் கருத்துக்கு முரணாகும். தொல்லாசிரியர் "நிலன் ஒருங்கு மயங்குதல் இல்லென மொழிப" என்பதாலும், "பூவும் புள்ளும்—வந்த நிலத்தின் பயத்த வாகும்" என்பதாலும் முதல் இரு பொருள்கள் விரவியவிடத்து முதற் பொருளைக் கொண்டு திணை கூறல் சிறப்புடையதெனத் தெரிகின்றது. ஆயினும் உரிப் பொருள் மயங்கலாகாதென அவர் சுட்டினமையின் உரிப் பொருளைக் கொண்டே திணை வகுத்தல் சாலச் சிறப்புடைத்தாகும். முதல் கருப்பொருள்கள் திணை மாறுபட்டு நிற்பின் அவை திணைமயக்காம்: ஆனால் உரியையும் திணை மாற்றிக் கொள்ளும் உரையாசிரியர்கள் முறையே இன்று வழக்கில் உள்ளது. இதனைப் பின் வரும் நற்றிணைச் செய்யுள்களில் காண்க.

நற்றிணை 11. "நிலவு விரிந்திருக்கிறது. கடற்கரை வழியாக அவர் வண்டியில் வந்து சேர்வார். நேற்றுக் குறி தவறியதை நினைத்து 'அவர் வரார்' என்று எண்ணி நீ புலத்தலை ஒழிப்பாய்" என்ற பாட்டு உரிப் பொருளால் மருதமும் முதல் கருப் பொருள்களால் நெய்தலுமாகின்றது.

நற்றிணை 13. "மலையில் மயில் பார்த்திருக்கக் குயில் தினையை எடுத்துச் செல்கிறது. (தலைவி அறியத் தலைவனைப்

பரத்தை எடுத்துச்செல்கின்றாள்) நீ எழுந்து குயிலை ஓட்டுவது தான் இல்லை; அழாமல் இருக்கலாகாதோ" என்ற கருத்து பரத்தமையை ஒழிக்க வகை தேடாமல் வீணே ஊடி வருந்து வதன் பயன் யாது என்று உரிப் பொருளால் மருதம்; மலை, மயில், தினை முதலிய முதல் கருப் பொருள்களால் குறிஞ்சி ஆகின்றது.

நற்றிணை 119. "பொறி வைத்துப் பன்றி பிடிக்கும் அவர் இன்று பூவும் கண்ணியும் கொண்டு வருவார். வந் தால் நான் அவரைத் தீண்டேன். அவர் ஊடிச் செல்லினும் பொருள் படுத்தேன்" என்ற பாட்டு, தலைவன் பிறமாதரை மயக்குதல் தெரிந்து தலைவி புலத்தலால் மருத உரிப் பொரு ளும், மலை பன்றி வேட்டையால் குறிஞ்சி முதல் கருப் பொருள்களும் கொண்டுள்ளது.

நற்றிணை 217. "புலி ஓடிவிட, யானை அயலிற்சென்று வேங்கை மரத்தைச் சாய்க்கும். மலைநாடர் அவர். அவர் நல்லவராகவே இருக்கட்டும்! இன்று அவர் என்னை மன்றாடி நிற்க ஊடல் புரிவேன்" என்ற கருத்து, தலைவன் பரத்தை மையும் தலைவி ஊடலும் காட்டி உரிப் பொருளால் மரு தம்; புலி, யானை, வேங்கை குறிப்பிடும் கருப்பொருளால் குறிஞ்சி.

நற்றிணை 232. "யானை பிடியுடன் குளத்தில் நீராடி, வாழையை வெறுத்து மூங்கில் வேலிக்குள் வளரும் பலாப் பழத்தைத் தின்று அழிக்கும் மலைநாட, நீ அடுத்த ஊருக்குப் புறப்படுகின்றாய். அங்குத் தங்குவதாயின் உன் கழுத் தணியை இங்கு வைத்துச் செல்" என்ற கருத்து, தலைவன் பரத்தையிடம் அணிகளைக் கொடுத்துக் கெடுத்து விடுவான் எனத் தலைவி வெகுண்டு கூறும் ஊடலால் மருதம்; யானை, பலா முதலிய பொருள்களால் குறிஞ்சி.

நற்றிணை 281. "மக்கள் அள்ளி வீசும் சிறுசோற்றை உண்ணாமல், காகம் ஊனும் சோறும் மிகுதியாக விரும்பிக் காத்திருப்பதுபோல நேற்று இரவு அவரும் ஊடலால் பேசாதிருந்து கொண்டார்; குளிரையும் எண்ணாமல் தூங் காமல் நானும் ஒருபுறம் ஒதுங்கி யிருந்து கொண்டேன்: அவரிடத்தில் அன்பு உளதோ" என்ற கருத்து "அன்பிலை

கொடியை என்றற்கு முரியள்" என்ற தொல்லாசிரியர் வாக்குக் கிணங்க மருத உரிப் பொருளும், காதத்தைக் குறித்து நெய்தற் கருப்பொருளும் பெற்றது.

நற்றிணை 395. "எனக்கும் உமக்கும் என்ன! என் மீது தான் சிறிதும் உமக்கு அன்பு இல்லையே. புலத்தில் வயிரு ர மேய்ந்த பசு வீட்டில் உண்ணுது செம்மாந்து நிற்கும் தன்மை யுடையவரானீர். உம்மால் என் நலமெல்லாம் இழந்தேன்: அதற்கு ஈடு செய்து, அப்பால் செல்லும்" என்ற பாட்டு, பரத்தைமேலுற்ற பற்றினுல் தன்னைக் கவனியாதிருப்பதாகத் தலைவி ஊடி நிற்றலைக் காட்டி மருதம் ஆகின்றது: கடல் நெய்தல் முதலிய முதல்கருப்பொருள்கள் காட்டி நெய்தல் ஆகின்றது. இவற்றின் திணை முறைகளை ஆன்ருேர் கூறும் முறையில் கொள்க.

## பயன்

"உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது அறிவில்லாதாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே" என்று கூறு கின்ருர் இளம்பூரணர். அறிவாவது யாது? "தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு" என்ருர் வள்ளுவர். அது கற்றனைத் தூறும் என்பதும் அவர் காட்டிய நெறியே. நற்றிணை மருதத்தில் நாம் கற்றது யாது? அதனுல் பெற்ற அறிவு யாது?

நற்றிணை 50. செறுநரும் விழையும் செம்மலோன் என்ற அடி.

" இன்னுமை இன்பம் எனக்கொள்ளின் ஆகும்தன்
ஒன்னுர் விழையும் சிறப்பு"

என்ற குறளை நினைப்பூட்டுகின்றது. இதனுல் ஆடவரும் மகளிரும் யாவரும் விரும்பும் முறையில் அகத்தினும் புறத்தினும் வாழ்வு நடாத்த வேண்டுமென்று குறிக்கப்படுகின்றது. நற்றிணை 80, மருந்து பிறிதில்லை நான் உற்ற நோய்க்கே என்று தலைவன் கூறுவது தலைவன் தலைவி மாட்டுக் கொண்டுள்ள இரண்டற்ற அன்பை வெளிப்படுத்துகின்றது. "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை தன் நோய்க்குத் தானே மருந்து" என்றது குறள். இத்தொடர்

நற்றிணை 140, 247-ம் செய்யுள்களிலும் "மருந்து பிறிதில்லை யான் உற்ற நோய்க்கே"

"மருந்து பிறிதில்லை நன்கறிந்தனை சென்மே" என்று காணக்கிடக்கின்றது.

"எமக்கே, வருகதில் விருந்தே சிவப்பா னன்று
சிறிய முள்ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் கம்மே"

—நற்றிணை, 120

"நன்மனை நனிவிருந் தயரும்
கைதூ வின்மையின் எய்தா மாறே"

—நற்றிணை, 280

என்ற அடிகள், தமிழர் நாகரிகத்தில் விருந்தோம்பல் சிறந்த பகுதி என்றும், தமிழ் மகளிர் 'செல் விருந்தோம்பி வரு விருந்து காத்திருப்பர்' என்றும் விளக்கி நிற்கின்றன.

நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்று ; தம் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது, சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கண் செல்வம் செல்வம்என் பதுவே.

—நற்றிணை, 210

என்ற வாக்கு முன்வினைப் பயனால் பெற்ற சிறப்புக்கள் செல்வமாகா. கண்ணோட்டத்துடன் வாழும் வாழ்வே பெருஞ் செல்வமுடைமை என்று வற்புறுத்துகின்றது. புறத்தில் தழிஞ்சித் துறை காண்டல்போல் அகத்திலும் தழிஞ்சி கொண்டு ஆடவரும் மகளிரும் இன்புற அருள்வழி காட்டுகின்றது ; அருள் இன்றேல் அகத்தில் இருள் படர்கின்றது.

கேட்டோர் அனைய ராயினும்
வேட்டோ ரல்லது பிறரின் னோரே.

—நற்றிணை, 216

என்ற அடிகளின் உண்மையை உணர்வாரே மனக்கவலை அறுக்கும் மருந்தைப் பெறுவார். 'தமக்கு மருத்துவர் தாம்' என்பதை உணர்ந்து பிறரை நோவாது சிறப்படைவர்.

"முகை அவிழ் கோதை வாட்டிய பகைவன்"
—நற்றிணை, **260**

"என்கோல் நேர் எல்வளை நெகிழ்ந்த நும்மே"
—நற்றிணை, **340**

என்ற அடிகள் ஆடவரைப பிரிந்து மகளிர் உள்ளமும் உடம்பும் வாடி நிற்பதை அறிவிக்கின்றன. இன்பமே எங்கும் நிலவ விரும்பும் ஆடவர் தம் பெண்டிர் இவ்வாறு கருத இடந்தரா முறையில் வாழ்க்கை நடத்துவதே சிறப்புடைத்தாகும். இதனால் மனை மங்கலத்துடன் விளங்கும்.

முகைநாண் முறுவல் தோன்றித்
தகைமலர் உண்கண் புதைத்துகந் ததுவே.
—நற்றிணை, **370**

மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறங்கெட அறியா தாங்கு......
கெடுஅறி யாய்என் நெஞ்சத் தானே.
—நற்றிணை, **400**

என்ற அடிகள் துன்பத்திலும் தமிழ் மகளிர் கொண்டாரை மறவாது, அவர் சிறப்பையும் நல்வாழ்வையும் விரும்பி நிற்பதையும், அவர் காட்சி பெற்றபோது அகமும் புறமும் மகிழ்ந்து மலர்வதையும் அறிவிக்கின்றன. மேற்கூறிய அடிகளால் இல்லறத்தார் யாவரும் ஏத்தும் முறையில் சிறந்த வாழ்வு நடாத்தவேண்டும் என்றும், விருந்தோம்பல் அவர்களின் முதன்மையான கடமை என்றும், தலைவனும் தலைவியரும் ஒருவருக்கொருவர் பெருந்துணையாக விருப்பதாய் எண்ணி வாழ வேண்டுமென்றும், துன்புற்றோரை அயலார் தாங்கி உதவ வேண்டுமென்றும், தம் துன்பங்களைத் தாம் உணர முடியுமே யன்றிப் பிறர் ஆற்றுவது ஒப்பனையே ஆகும் என்றும், பெண்டிர் தம் கணவர் செய்யும் கொடுமைகளையும் பொருட்படுத்தாது மேவி விரும்பும் இரக்க குணமுடையவரென்றும் அறியலாகும்.

ஊடல் கூடலுக்குத் தோன்றிய உப்பே ஆயினும் அதனால் விளையும் தீங்குகள் சில உள. தலைவி மனம் ஆற்று

ளாய்த் தகாத முறையில் "அன்பிலே, கொடியை, யாரைநீ" என்று கூற நேரிடுகின்றது. தலைவனும் சின்னேரங்களில் பொறுமையை இழந்து தகாதன புரிய நேரிடுகின்றது.

"இன்னுயிர் உய்யுமீங் கென்ற போதினும்
பொன்னவிர் முலையினுர் புலர்ந்த காலையும்
முன்னரும் சூதினும் பொய்ம்மை மூரிவேல்
கன்னவில் தோளிஞய், கழறலாம் என்பம்"

என்ற பாண்டி மன்னர் வாக்கு ஊடல் காலத்தில் பொய் பல கூறவும் சட்டமியற்றுகின்றது.

"கூடல் மகளிர் ஆடல் தோற்றமும்
பாடல் பகுதியும் பண்ணின் பயங்களும்
காவலன் உள்ளம் கவர்ந்தன என்றுதன்
ஊடல் உள்ளம் உள்கரந் தொளித்துத்
தலைநோய் வருத்தம் தன்மே லிட்டுக்
குலமுதல் தேவி கூடா தேக
மந்திரச் சுற்றம் நீங்கி மன்னவன்
சிந்தரி நெடுங்கண் சிலதியர் தம்மொடு
கோப்பெருந் தேவி கோயில் நோக்கி...
சினையலர் வேம்பன் தேரான் ஆகி
ஊர்காப் பாளரைக் கூடி ஈங்கென்
தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கைய தாகில்
கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கென"

என்ற சேர மன்னர் தந்த கதையை உன்னுவோமாயின் ஊடலால் நாடும், அரசியலும் பாழ்பட நேர்ந்தனவாக அறிகின்றேம். ஆதலின் ஊடலுக்குப் பெருங் காரணமாகக் கற்பிக்கப்படும் பரத்தைமையை ஒழித்து ஆடவரும் மகளிரும் நேரிய முறையில் ஊடிக் கூடி இன்புற்று வாழ்வார்களாக!

"உப்பமைந் தற்றுல் புலவி அதுசிறிது
மிக்கற்றுல் நீள விடல்."

## நாட்டுப்பற்றும் நன்றியறிதலும்

கவியரசராகிய கம்பர் தமது சோழ நாட்டையும், காவிரி நதியையும், சடையப்ப வள்ளலையும் மிகுதியும் பாராட்டுவர். 'பொன்னியைப் பொருவும் கங்கை' என்றும், 'காவிரி நாடென்ன கழனிகொள் கோசலம்' என்றும், 'சடையனே அனைய சான்றோர்' என்றும் பல இடங்களில் தம் நாட்டுப் பெயர்களை உவமானமாகக் காட்டுவர். தமிழ் நாட்டுப் பெயர்களை உவமானமாகக் கொண்டதால் கம்பர் தம் நாட்டின் மீதும், தம் நாட்டுப் பொருள்கள் மீதும், தம்மை ஆதரித்தவர் மீதும் கொண்டிருந்த பற்று புலப்படுகின்றது. உயர்வுடையதே உவமையாகக் கொள்ளப்படும். இம்முறை நம் சங்க காலப் புலவர்களால் கையாளப்பட்ட ஒரு பெரு வழக்காகும். தலைவி தன்னுடைய சிறப்பைக் கூறுமிடங்களில் உவமையாகத் தன் நாட்டு ஊர்களையே ஒப்பிடுகின்றாள். "தேர்வண் விரான் இருப்பை அன்ன என் தொல் கவின்", "வாணன் சிறு குடி அன்ன என் கோலம்", "இருப்பை அன்ன என் கூந்தல் நலம்", "வேளிர் குன்றூர் அன்ன என் நன்மனை நனிவிருந்து", "சோழர் உறந்தை அவையத்து அறங் கெட அறியாதாங்குச் சிறந்த கேண்மையொடு", "ஊனூர் ஆங்கண் பிச்சை சூழ் பெருங்களிறு போல" என்ற குறிப்புக்களால் பண்டைப் புலவர்கள் தம் ஊரினும், நாட்டினும், தலைவர்களிடமும் கொண்டிருந்த பற்றும், அவர்களைப் பாராட்டிய முறையும் வெளியாகின்றன. மேலும், "மலையனது ஒரு வேற்குப் பலர் ஓடியாங்கு", "கிள்ளி வெண்ணி சூழ்ந்த வயல் ஆம்பற் றழை தைஇ", "ஓரி கொன்ற ஒரு பெருந் தெருவில் காரிபுக்க நேரார் புலம்போல்," "வழுதிவாழிய எனத்தொழுதீண்டு எயிலுடையார் போல", "மலையன் முன் பேரிசை வயிரியர் முழவுபோல்" என்ற குறிப்புக்களைக் காணுமிடத்து, இத்தகைய வழக்கு மறையாது வந்திருந்தால், நாட்டுமக்கள் தம் முன்னோர்போல் ஆகக் கருதிப் பெருஞ் செயல்கள் புரிந்து பேர் நாட்டிச் சிறந்திருந்திருப்பர் என்று எண்ண இடம் ஏற்படுகின்றது. ஆனால் காலம் மாறியது! பிற நாட்டினரை, பிற நாட்டை உவமையாகக் கொள்கிறோம்; அவ்வாறு கொள்ளவே நம் மேதாவிகளும், பெரும் பத்திரிகைகளும்

கற்பிக்கின்றனர்! இந் நெறிமாறும் நாளில் தமிழ்நாடு உய்யும்.

## உள்ளுறை உவமம்

அகல்வயல் உழுத ஈரச் சேற்றில் விதைக்க வித்தொடு சென்ற வட்டி பற்பல மீனொடு பெயரும் ஊரன் என்னும் தொடர் அன்புக்குரியவராய்ப் பரத்தையரைத் தலைவரிடம் சேர்ப்பிக்கும் பாணர் தக்க பொருள்பெற்று மீள்வர் என்று உட்கருத்துத் தந்து நிற்கின்றது. (210).

கழுநீர் மேய்ந்த எருமை தாமரை மலர் முனை இ, மள்ளர்போல் நடந்து, அயலமைந்த வெண் மணல் திட்டைகளில் துஞ்சும் ஊரன் என்னும் தொடர் தலைவன் தலைவியை விரும்பாமல் பரத்தையிடம் போகந் துய்த்து அவ்விடத்தும் தங்காமல் அயலிடத்தைச் சேர்ந்து அனுபவித்து வருவான் என்று பொருள் குறிக்கின்றது. (260).

கொக்கு அமரக் கிளையசைய மாங்கனி குளத்தில் விழும் தண்டுறை யூரன் என்பது பரத்தை திட்டியபோது தலைவன் தன்மனை வந்து சேர்வான் என்று குறிப்பிடுகின்றது. (280).

கன்றுடைப் புனிற்று தின்ற மிச்சில் ஆம்பல் புதுப்பூ ஓய்விடு நடைப் பகடு ஆரும் ஊரன் என்றது, தாய்மை எய்திய தலைவி தலைவனின் இளமை இன்பத்தை நுகர்ந்து இன்புற்றாள்; மீந்த முதுமைச் செவ்வியையே பரத்தையர் நுகர்கின்றனர் என்று குறிப்பிடுகின்றது. (290).

காற்று மோத, ஆம்பல் தாமரைத் தாளில் தாழும் தண்டுறை யூரன் என்ற தொடர் தலைவனால் தூண்டப் பெற்றுப் பாணன் தலைவியிடம் பலபல பேசிப் பண்படுத்த வந்தான் என்று பொருள்படுகின்றது. (300).

எருமைக்கடா நாரை இரிய நெடுநீரில் துடும் எனப் பாய்ந்து, தன் வருத்தம் நீங்க மருதநிழலில் வதியும் ஊரன் என்ற தொடர் தலைவன் சேரியில் மூழ்கி இறுதியில் தன் மனை வந்து சேர்வான் என்று குறிப்பிடுகின்றது. (330)

பெருங் குளத்தை நீத்து மடைநீர் வழியாகக் கால் வாயில் ஏறி வாளைமீன் வயலுள் சேர்ந்து சேறுபட்டு ஓடித்

திரிந்து, உழவர் கைக்கோலுக்கும் தப்பி வரம்புகளில் தங்கிப் புரண்டு வாழும் என்பது தலைவன் தன் மனையை நீத்துப் பாணன் காட்டிய வழியே சென்று பரத்தையர் சேரியில் பலர் கண்டு சிரிக்கச் சென்று காமக்கிழத்தி வீட்டில் தங்குவான் என்ற பொருள் சுட்டி நின்றது. (340)

மள்ளரின் முடிவுக்கு அஞ்சிப் புள்ளினம் பறந்து மருத மரத்தில் அமர, அங்கு அதன் பூக்கள் உதிரும் என்றது ஊரார் பழிகூறுவதற்காகத் தலைவன் தலைவியிடம் வருகிறான்; தலைவி தலைவனைக் கண்டு மாறுபட்டு நிற்கிறாள் என்று அறிவிக்கின்றது. (350)

பொய்கையில் வாளைமீனிருக்க அதனை உண்ணுமல் நீர் நாய் துயிலுதல் தலைவன் தலைவியை விரும்பாமல் வாளா விருப்பதைக் குறிக்கின்றது. (390)

வாழைப்பூவை அசைக்கும் வளப்பமுடைய நெற்கதிர்களை மள்ளர்கள் சேர்த்துவைக்க, அதில் வாளை பிறழும் என்றது தலைவி மனத்திற்கு வேதனை தரும் பரத்தையரைப் பாணர்கள் சேர்த்துக் கொடுக்கத் தலைவன் ஆங்கு இன்பம் துய்ப்பான் என்ற கருத்தை வெளிப்படுத்தும். (400)

இவ்வாறு மருதநிலப் பொருட்களைத் தலைவன் தலைவியருடைய செய்கைகளுக்கு உவமை காட்டும்படி ஆசிரியர்கள் அமைத்த முறை பாராட்டற்பாலது.

## இறைச்சி

இறைச்சி என்பது என்னை? உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் வேற்றுமை என்னை என்பன ஆராயத்தக்கவை. தொல். பொருளியல் 35, 36 இறைச்சிபற்றிக் கூறுகின்றன. ஆங்கும் உரையாசிரியர் "ஆராய்ந்துணரும் நல்லறிவுடையோருக்கு" இது புலப்படும் என்று விளக்காது கூறிப் போந்தார். இறைச்சி உள்ளுறைபோல் நின்று, தலைவனுடைய கொடுமைபற்றிக் கூறுவதுடன், தலைவிக்கு இனி அவன் துணையுண்டு என்ற நற்குறியும் காட்டி நிற்பதாகும். நற்றிணை மருத இறைச்சிபற்றி இனிக் காண்பாம்.

ஆம்பல்போது கீழ்த்திசை வெள்ளியில் இருள்கெட விரியும் பொய்கை ஊர, பரத்தையைத் துறந்தருள்; நிற்

காணுங்கால் இனிதே என்பன பாட்டில் குறிப்பிடப்பெற்ற பொருள்களாகும். ஆம்பல் எத்துணை விரிந்திருப்பினும் அது வெள்ளி ஆகாது; அதுபோல் பரத்தை எத்துணை மகிழ்ந்திருப்பினும் தலைவிபோல் உதவாள் என்பது கருத்து. அஃதுடன் "பரத்தையை விட்டொழி, உன்னைப் பார்ப்பதே எனக்கு இன்பந் தருகின்றது. வாடிய பயிர் நீர் இறைக்கப் பெற்றதுபோல் நான் மகிழ்கின்றேன்" என்று தலைவி கூறுவது தலைவன் தலைவியுடன் ஒன்றி நிற்பதாகக் காட்டி நிற்கின்றது. (230)

தாமரை இலை அசைய, மாதர்கள் அஞ்ச, வாளைமீன் பொய்கையின் குண்டுநீர் சேர்ந்து பிறழும் என்றது காமக் கிழத்தியர் வருந்தத் தலைவன் தன் சொந்தமனையில் கிழத்தியுடன் உறைவான் என்ற பொருள் தந்து நிற்கின்றது. (310)

இவ்வாறு இறைச்சி என்பது தலைவியின் வாடிய உள்ளத்திற்கு நீர் இறைவை தந்து நிற்பது காண்க. உரையாசிரியர் 80, 180, 310 செய்யுள்களில் இறைச்சி கற்பிக்கின்றமை, எம் பொருள் முறையில் ஒவ்வாமையால் விடுத்தனம்.

## இறுவாய்

பிற்காலப் புலவர்களின் பத சாகித்யங்கள் போன்று சங்க காலத்தில் எழுந்தனவாகும் அகப்பொருள் நூல்கள்; ஆதலின் இவற்றைக் கற்று ஆராய்ந்து வாதிடாது, அறிவுடையோர் கலை நயங் கண்டு இன்புற்று மகிழ்ந்து அமர்வார்களாக.

# நெய்தல்

[வித்துவான் ஆ. பூவராகம் பிள்ளை]

## i. முன்னுரை

அன்புமிக்க பெரியோர்களே,

தமிழ்நலஞ் சிறந்த சங்கநூல்களுள் ஒன்ருகிய நற்றிணைக்கண் உள்ள நெய்தற்றிணைப் பாக்களைப்பற்றி யானறிந்தவாற்ருன் ஈண்டுச் சில கூறப் புகுகின்றேன்.

பதிப்பிடப்பட்டுள்ள நற்றிணை நூலின்கண் உள்ளவாறு நெய்தற்றிணைப் பகுதியவாக 102 பாடல்கள் உள்ளன. இவற்றுள் பாடினேர் பெயர் அறியப்படாதவை 13 பாடல்கள். ஏனைய 89 பாடல்களும் 47 புலவர்களாற் பாடப்பட்டனவாகும். பாடியவர்களுள் இருபாலாரும் உள்ளனர். இவர்களுள் இந் நூலிலுள்ள பாடல்களைமட்டும் பாடியவர் சிலர். புறநானூறு, அகநானூறு முதலிய பிற நூற்பாடல்களும் பாடியவர் பலர். உலோச்சனர் என்னும் புலவர் பாடியனவாக இந் நற்றிணையில் 20 பாடல்கள் உள்ளன. அவற்றுள் 19 பாடல்கள் நெய்தற்றிணைக் குரியன. இவரைப்பற்றிச் 'செந்தமிழ்', தொகுதி 31, பகுதி 2-ல் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. அதனல் யான் ஈண்டு விரித்தெழுதாது விடுக்கின்றேன்.

இந் நற்றிணைப் பாக்கள் பல தொல்காப்பியம் பொருளதிகார உரையில் மேற்கோளாக வந்துள்ளன. பதிப்பு நூலில் உள்ளவற்றிற்கும் தொல்காப்பிய உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டவற்றிற்கும் (கருத்துரைத்திருப்பதிலும் செய்யுள் வடிவிலும்) வேறுபாடுகள் பல உள்ளன. உதாரணமாக ஒன்று வருமாறு :

தலைவன் கூற்ருகவுள்ள " கடுந்தேரேறியும் " என்னும் 349-ம் பாடல் " என்னெனை நினையுங்கொல் பரதவர் மகளே " என முடிந்துள்ளது. இதற்குப் பதிப்பு நூலில் தலைவன், பரதவர்மகளாகிய தலைவி தன்னைப்பற்றி என்னினைவாளோ என்று கருதுவதாக உரை கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் 11-ம் சூத்திர

வுரையில் நச்சினார்க்கினியர், "தோழி நம்வயிற் பரதவர் என்னென நினையுங்கொல் என்க" என்றுரைத்தனர். இங்கு நச்சினார்க்கினியர் கூற்றுப் பொருத்தமாகத் தோன்று கின்றது. உரைமேற்கோளிலுள்ளது பொருத்தமில்லாமல் பதிப்பு நூலில் உள்ளது பொருத்தமாக இருப்பதும் உண்டு. இவ் வேறுபாடுகளெல்லாம் ஒருங்கு தொகுத்துத் திருத்தி ஒழுங்குசெய்தல் ஓரின்றியமையாத நற்பணியாகும்.

## ii. முதற்பொருள்

தமிழிலக்கண நூல்களால் வகுத்துரைக்கப்படும் அகனைந்திணைகளில் நெய்தற்றிணையும் ஒன்றாகும். ஒவ்வொரு திணையும் முதல், கரு, உரி என்ற மூன்று பகுப்புடையது. நெய்தலுக்கு முதற்பொருள் : நிலம் - கடலும் கடல் சார்ந்த இடமும். காலம் - அறுவகைப் பெரும்பொழுதும், ஞாயிறு வீழ் பொழுதாகிய சிறுபொழுதும். கருப்பொருள் ; தெய்வம் - வருணன், மரம் - புன்னை, தாழை முதலியனவும் பிறவுமாகும். உரிப்பொருள் : இரங்கல். (களவில் ஒரு வழித் தணத்தல், வரைவிடைவைத்துப் பிரிதல் முதலிய வற்றினும், கற்பில் பொருள்வயிற் பிரிதல் முதலியவற்றி னும் தலைவி தலைவனை நினைந்திரங்குதல். இரங்கல் தலை வனுக்கும் உண்டெனினும் பெரும்பான்மைபற்றித் தலைவிக் குக் கூறப்பட்டது.)

தொல்காப்பியர் நெய்தலுக்குப் பெரும்பொழுது இன்னதெனக் கூறாது சிறுபொழுதே கூறிச் சென்றமை யின் உரையாசிரியர்கள் அறுவகைப் பெரும்பொழுதும் கொள்வாராயினர். இந் நற்றிணையில்,

"புதுமணற் கானற் புன்னை நுண் டாது
கொண்டல் அசைவளி தூக்குதொறும்"
—74

எனக் கீழ்காற்றும்,

"வடந்தை துவலை தூவக் குடம்பை"
—152

"அயிர்த்துகள் முகந்த ஆறு வூதையொடு"
—163

என வாடைக் காற்றும்,

" ததர்பிணி யவிழ்ந்த தாழை வான்புதர்
தயங்கிருங் கோடை தாக்கலின் நுண்டாது
வயங்கிழை மகளிர் வண்டிற் றூஅம்" —299

என மேல் காற்றும் கூறப்பட்டிருத்தலின் இக்காற்றுக்கள் வீசும் பருவமெல்லாம் நெய்தற்குரியவா யமைதலின், அறுவகைப் பெரும்பொழுதும் கொள்ளுதல் பொருத்தமாதல் காண்க.

நெய்தற்குச் சிறுபொழுது எற்பாடு எனத் தொல்காப்பியர் கூறினர். அதற்கு நச்சினார்க்கினியர் இளம்பூரணர் முதலியவர்கள் ஞாயிறு வீழ் பொழுதாகிய பிற்பகல் எனப் பொருள் கொண்டனர். ஆசிரியர் சிவஞான முனிவர் தொல்காப்பியச் சூத்திர விருத்தியின்கண் ஞாயிறு எழு பொழுதாகிய நாள் வெயிற் காலை என்றுரைத்தனர். நெய்தற்கு உரிப்பொருள் இரங்கலாதலின் அது சிறப்பதற்கு ஞாயிறு வீழ் பொழுதே பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது.

இலக்கியங்களில், பிரிந்த தலைவி துன்புறு மிடங்களில் ஞாயிறு வீழ்பொழுது, மாலை, இரவு இவைகளே காணப்படுகின்றன. காலைப் பொழுதில் இரை தேடச் சென்ற மாவும் புள்ளும் தத்தம் துணையுள்ளித் திரும்பி வருதலையும், மாலைப் பொழுதில் உண்டாகும் திங்களின் தோற்றம் முதலியவைகளையுங் கண்டு தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றுமை மீக்கூர்தலும், இரவில் ஊரெல்லாம் துயில் மடிந்த நிலையில் தான் துயில் கொள்ளாது அன்றிற் குரல் கடலோசை முதலியவற்றைக் கேட்குங்கால் அங்ஙனமே ஆற்றுமை மீக்கூர்தலும் இயல்பாகும்.

" புள்ளுடன்,
கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேர......
புலம்பொடு வந்த புன்கண் மாலை
யன்னர் உன்னுர் கழியிற் பன்னுள்
வாழலேன் வாழி தோழி" —117

" ஆறு தலைக்குங் கடன்மீ னருந்திப்
புள்ளினங் குடம்பை யுடன்சேர் புள்ளார்
துறந்தோர் தேஎத் திருந்துநனி வருந்தி" —382

எனவரும் நற்றிணைச் செய்யுட்களில் புட்கள் குடம்பை சேர்தலைக் கண்டு தலைவி தலைவனை நினைந்து வருந்துதல் காண்க. இந் நற்றிணை நெய்தற் பாக்களுள் காலைப் பொழுது ஒரு சில பாக்களில் வருவதாக, ஞாயிறு வீழ் பொழுதும், மாலையும், இரவும் மிகப் பலவாய பாக்களில் வருவனவாயின. அன்றியும் ஒரு சில பாக்களில் வரும் காலைப்பொழுது நெய்தல் மலர்தல், அப் பூக்களைப் பறித்தல், இரவில் மீன் பிடிக்கச் சென்றோர் திரும்பி வருதல் முதலிய பிறபொருள்கள் குறித்து வருவதாக, ஞாயிறு வீழ்பொழுதும், மாலையும், இரவும் தலைவி தலைவனை நினைந்து இரங்குதல் குறித்து வந்துள்ளமையும் காணத் தக்கதாகும். தலைவி செல் சுடர் நோக்கி வருந்துதலைத் திருக்கோவையார் 187-ம் செய்யுளிலும் காண்க. நற்றிணை 258-ம் பாடலில் எற்படுதல், ஞாயிறு வீழ்தல் என்னும் பொருளில் வந்திருத்தலும் காண்க. இவற்றால் ஞாயிறு வீழ்பொழுதே நெய்தலுக்குப் பொருத்தமாக அமைதலின் அதுவே ஈண்டுக் கொள்ளப்பட்டது.

## iii. கருப்பொருள் நிகழ்ச்சி

(1) நெய்தல் நிலத்து மக்கள் மீன் பிடித்தலும் உப்பு விளைத்தலும் சிறப்பாக உடையரேனும் நெல் விளைத்தலும் உடையராயிருந்தனர்.

"பெயினே,
விடுமா னுழையினம் வெறுப்பத் தோன்றி
யிருங்கதிர் நெல்லின் யாண ரஃதே வறப்பின்,
மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்
திருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்"

என்பதனால் மழை பெய்யின் நெல்வருவாயும், பெய்யா தொழியின் உப்பு வருவாயும் உண்டு என்பதும், அதனால் நெய்தல் எக்காலத்தும் வருவா யுடையதாய்ப் பிறநிலத்தினும் சிறப்புடையதாய் விளங்குவது என்பதும் புலப்படுதல் காண்க. ஆயினும் உப்பும் மீனும் பெருவருவாயாகக் கொண்டனராவர்

"பெருநீர் விளையுள்எஞ் சிறுநல் வாழ்க்கை"
"வானம் வேண்டா வுழவின்எங் கானலஞ் சிறுகுடி"
"உவர்விளை யுப்பின் உழா வுழவர்"

என்பனவற்றில் நெய்தல் நிலத்தவர், கடலே விளைவயலாகக் கொண்டு, மேகம் மழைத் தொழில் உதவ வேண்டாமலே ஏர்பூட்டி, உழுதொழில் இல்லாமலே விளைபயனுடையார் எனக் கூறப்பட்டுள்ளனர். அங்ஙனம் விளைக்கப்பட்ட உப்பு மலைபோல் குவிக்கப்பட்டிருத்தலும், மகளிர் அதன் மேல் ஏறி மீன் பிடித்துத் திரும்புவோர் படகை 'இஃது எந்தையது' 'அஃது உந்தையது' எனக் காட்டிக் கூறுதலும், அவ் வுப்பை மலைநாடுகள் வரையிலுங் கொண்டு விற்றலும், அதற்கு விலையாக நெல்லைப் பெற்று வருதலும் உண்டு. மருத நிலத்திலுள்ளவர் தம் நாட்டில் விளைந்த வெண்ணெல்லைக் கொண்டுவந்து நெய்தல் நிலத்தவரிடம் கொடுத்து அவர்பாலுள்ள உப்பைப் பெற்றுச் செல்லுதலும் உண்டு.

உப்பு, மழைத்தொழில் வேண்டாது விளைவதாயிருப்ப, மீன் வருவாய் மழை வளத்தாற் சிறப்பதாகவே யுள்ளது.

"வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்பப்
பாட்டம் பொய்யாது பரதவர் பகர"

என வருதல் காண்க. ("நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்" என்ற திருக்குறட் கருத்தும் இங்கு நோக்கத்தக்கதாகும்.) பரதவர் இரவிற் சென்று மீன் பிடித்து வைகறையிற் றிரும்பி வருதல், வலைகளை நிறையப் படகுகளி லேற்றி அவற்றை யானைகளைச் செலுத்தும் பாகர் போலக் கடலிற் செலுத்திச் சேறல், பெரிய மீன்களைப் பிடித்த அவ்விடத்தே அறுத்துப் படகுகளில் நிறைத்துக்கொண்டு வருதல், சுறு மீன்கள் வலையைச் சிதைத்துவிட்டு ஓடிவிடுதல், பரதவர் அவற்றை விடாது தொடர்ந்து பிடித்து வருதல், அங்ஙனம் சுறுமீன் சிதைத்த வலையை வீட்டிலுள்ள இளையரும் முதியரும் கிளையுடன் கூடிச் செம்மை செய்து வைத்தல், சிறு பிள்ளைகள் மீன் பிடிக்கச் செல்லும் தந்தையருடன் செல்ல விரும்பி யழுதல், தந்தையர் அவர்களை யுடனழைத்துச் செல்லாது நிறுத்திச் செல்ல அவர்கள் பனம்பழம் பெற்று மகிழ்ந்

திருத்தல், இரவில் விளக்கோடு படகிலேறி மீன் பிடிக்கச் சேறல், அவ் விளக்குக்களை இல்லிலிருப்போர் எண்ணுதல், திமிங்கிலம் பிடித்தற்குரிய கருவியை வன்மையும் முறுக்கு முள்ள கயிற்றிற் கட்டி எறிந்து அதனைப் பிடித்தல், (நோன் புரிக், கயிறுகடை யாத்த கடுநடை யெறியுளித், திண்டிமிற் பரதவர்) மீன் படகுகளுக்கு நறும் புகையிட்டுப் படைத் தல், பழைமையாகித் தொழிற்குப் பயன்படாத படகுகளை அங்ஙனம் புகையிட்டுப் படைத்தலின்றிப் புன்னைமரங்களிற் கட்டிவிடுதல், இன்னோரன்ன பல செயல்கள் மீன் பிடித்தல் பற்றியனவாகக் காணப்படுகின்றன.

சுறுமீன் மிக்க வன்மையுடையது; கொல்லுந் தன்மை யுடையது; வாள்போன்ற வாயையுடையது; கோட்டை யுடையது; என்பதும், இறுமீன் செம்மை நிறமுடையது; பஞ்சுபோன்ற தலையை யுடையது; பாவை போன்ற வடிவ முடையது; என்பதும் அறியப்படுகின்றன.

நெய்தல் நில மக்கள் கடற்கரையிற் கிடைக்கும் கிளிஞ் சிலை அகலாகக் கொண்டு அதன்கண் மீன் கொழுப்பை நெய்யாக இட்டு விளக்கெரித்தனர்.

"மீனெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறுதீ விளக்கு"

—175

"மீனிணந் தொகுத்த வூனெய் ஒண்சுடர்"

—215

எனக் கூறப்படுதல் காண்க. இதற்கேற்ப "நெய்த்தலைக் கொழுமீன்" (291) என நிணமிக்க ஒருவகை மீனுங் கூறப்பட்டுள்ளது. இதனோடு புன்னை விதையினின்று எண் ணெய் எடுத்துப் பயன்படுத்தி வந்தனர் என்பதும் அறியப் படுகின்றது. விருந்தோம்புமிடத்துக் காக்கைக்குப் பலியிடு தல், நள்ளிரவிற் சென்று மீன் பிடித்துக்கொண்டு வைகறை யிற் றிரும்பி வந்தோர் புன்னையின் வரிநிழலிற் கிளையொடுங் கூடியிருந்து தேறல் மாந்தி மகிழ்தல், மீன் மிகுதியாகக் கிடைத்தால் மறுநாட் செல்லாது இல்லிற் றங்கிவிடுதல், வீடுகளை முண்டகத் தழைகளால் வேய்தல், இரவில் ஊர் காப்பாளர் கையில் மணிகொண்டு ஒற்றை யொலியாக

அடித்துக்கொண்டு "காப்புடை வாயில் போற்றுக" எனக் கூவிச் செல்லுதல், ("ஒன்றெறி பாணியி னிரட்டும்" 132; என்பதற்கு ஒன்றுகின்ற தாளத்தில் மோதி யெழுப்பும் ஒலி போல ஒலியாநிற்கும் என உரை கூறப்பட்டுள்ளது. ஒரு தரம் தட்டி எழுப்பப்படும் ஒலிபோல ஒலிக்கும் எனக் கோடல் பொருத்தமாகும் என நினைக்கின்றேன்.) கடற் கரைத் துறையில் கட்சாடி வைக்கப்பட்டிருத்தல், நோன்பு மேற்கொண்ட மகளிர் அடும்பின் கொடியைக் கொய்து பயன்படுத்துதல், செல்வருடைய புதல்வர் அடித்து விளை யாடுதற்காகத் தோளில் தொங்கவிட்டுக்கொண்டுள்ள பறையின்கண் அழகுக்காகக் குருவியின் உருவம் எழுதப் பட்டிருத்தல், எழுமுனிவரர் (சப்தரிஷி) மண்டலத்தையும் ஞாயிற்றையும் தொழுதல், பனையிற் கடவுளிருப்பதாகக் கருதி வணங்குதல், கடவுளைச் சுட்டிச் சூளுரைத்தல் என் றின்னோரன்ன செயல்கள் நெய்தல் நிலத்தவரிடம் இருந்தன வாக அறியப்படுகின்றன.

போரிற் பெரும் புண்ணுற்று இறவாது கிடப்போரை நரி முதலியன தீண்டா வண்ணம் பேய் காத்து நிற்றலாகிய புறப்பொருட் கருத்தும் உவமையில் வைத்துக் கூறப்பட் டுள்ளது.

பரதவர் பிடித்து வரும் மீனை உணக்குதலும், அதனைக் கவர வரும் பறவைகளை ஓட்டிக் காத்தலும மகளிர் தொழி லாகும். அங்ஙனம் உணக்கும்போது தாம் புன்னையின் கொழுநிழலி லிருந்துகொண்டு மீனை அதன் முன்னிடத்து வெயிலிற் பரப்பி உணக்குவர். கானல் நீழலில் வெண் மணற் பரப்பில் பாவை யிழைத்து விளையாடுதலும், அல வனோடு ஓடி விளையாடுதலும், கடல் நீரிற் பாய்ந்து விளை யாடுதலும் உண்டு. நெய்தல் நிலத்து ஊர் ஒருவர் ஒருவரை யறியாதபடி மக்கள் நெருக்க முடையதாய் இருந்ததாகக் கூறப்படுதலாலும், யாமங் காவலர்கள் உளர் எனக் கூறப் படுதலாலும் நெய்தல் நிலத்துப் பெரிய நகரங்கள் இருந்தன என்பது அறியப்படுகின்றது.

(2) புன்னை, தாழை, ஞாழல், கண்டல், பனை, தில்லை, அடும்புக்கொடி, நெய்தல், முண்டகம் முதலிய மரம் கொடி வகைகள் நெய்தற் பாக்களிற் காணப்படுகின்றன. "வேம்

பின் படுசினை யிருந்த குராஅற் கூகையும்" "முல்லை, அரும்பு வாயவிழும் பெரும்புன் மாலை", "ஈங்கை முகைவீ யதிரல்" என வேம்பும், முல்லையும், ஈங்கையும், அதிரலும், நாவலும் ஓரோவழி அருகிவருதலைத் திணை மயக்கமாகக் கொள்ளுதல் பொருத்தமாகும். இவற்றுள் புன்னை மிகச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. அதன் உறுப்புக்கட்கு இரும்பு, பொன், வெள்ளி, நீலமணி இவற்றை ஒருசேர உவமித்து,

"இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத் தன்ன பாசிலை யகந்தொறும்
வெள்ளி யன்ன விளங்கிணர் நாப்பண்
பொன்னி னன்ன நறுந்தா துதிர" —249

என ஒரு புலவர் சிறப்பித் துள்ளனர். புன்னையின் மலர் சூடுதற்குரிய தாதலின், அங்ஙனஞ் சூடுதற்குப் பறித் தொழிந்ததன்மேலும், அது நெய்கனி பசுங்காய் நிறையக் காய்க்கு மியல்பின தெனப்படுதலின், புன்னை விதையினின் றும் நெய் (எண்ணெய்) எடுத்தல் உண்டென்பது அறியப் படுகின்றது. அதன் அரும்பு மலரும்போது குருவியின் உடைந்த முட்டைபோலிருக்கு மென்றனர். இங்ஙனமே தாழையும், சுறுமீனின் மேற்பக்கம் போலச் சருச்சரை பொருந்திய அடிமரத்தை யுடையது; சுறுமீனின் கோடு போன்ற முட்கள் பொருந்திய இலையை யுடையது; களிற்றி யானையின் மருப்புப்போன்ற அரும்பினை யுடையது; அவ் வரும்பு முதிருங்கால் உழைமானின் தலை சாய்ந்திருத்தல் போலிருப்பது; அதன் மணம் விழாக் கொண்டாடும் கள முழுதும் பரவுந் தன்மையது என அதன் தன்மையெல்லாம் ஒருங்கமைத்து,

"இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதற்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பி னன்ன வரும்புமுதிர்பு
நன்மா னுழையின் வேறுபடத் தோன்றி
விழவுக்களங் கமழு முரவுநீர்ச் சேர்ப்ப" —19

என ஒரு புலவராற் சிறப்பிக்கப்பட் டுள்ளது. (தொல் - பொருள் - களவியல் 23-ம் சூ-நச்-உரையில் இச் செய்யுள்

மேற்கோளாகக் காட்டப்பட்ட விடத்து, "நன்மானுளையின் வேறுபடத் தோன்றி" எனக் காணப்படும் பாடம் பொருத்தமாகத் தோன்றுகின்றது.) தாழை மலரும்போது அதன் நறுந் தாதுதிர்தல் குடத்திலிருந்து சோறு சொரிவது போலும் என்றனர் மற்றொரு புலவர்.

(3) கருங்கால் வெண்குருகு, தடந்தாள் நாரை, சிறு வெண்காக்கை, அன்றில், வெளவால், நண்டு, நீர் நாய், மீனினங்கள், முதலை முதலிய பறவைகளும் நீர் வாழினங்களும் நெய்தற் பாக்களிற் காணப்படுகின்றன. 311-ம் பாடலில் மான் கூறப்பட்டிருத்தலைத் திணை மயக்கமாகக் கொள்ளல் தகும். வெளவால் முள்ளெயிற்றை யுடையதாய்ப் பகற்பொழுதில் உயர்ந்த மரக்கிளைகளைப் பற்றித் தொங்கிக் கொண்டு தூங்குந் தன்மையுடையது; இரவில் இரைதேடச் செல்வது எனக் கூறப்பட்டுள்ளது. அது புளிச்சுவையில் மிக்க விருப்பமுடையதாகக் கூறப்பட்டுள்ளது.

"உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்க லஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழர் அழிசியம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாங்கு" —87

என்னும் பகுதியில் மாமரத்தில் தொங்கிக்கொண்டு தூங்கும் வெளவால் நெல்லிப்பழம் உண்டதாகக் கனாக் கண்டாற் போல் எனக் கூறப்பட்டிருத்தலின், அதற்கு அப் பழத்தின் கண் உள்ள விருப்பம் அறியப்படும்.

"பால்கலப் பன்ன தேக்கொக் கருந்துபு
நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
நெல்லி யம்புளி மாந்தி யயலது
முள்ளி லம்பணை மூங்கிற் றூங்கும்"

என்ற (குறுந்தொகை, 201) செய்யுளில் இனிய மாம்பழத்தை யுண்டு பின்னர் நெல்லிப்பழம் உண்ணும் எனக் கூறப்பட்டது. இவ்விரண் டிடத்தும் நெல்லிப் பழமே கூறப்படுதலின், புளிச் சுவைக்கு நெல்லிப் பழத்தையே அது மிகுதியாக விரும்பும்போலும்!

நாரையால் நலனுணப்பட்ட நாரைப் பெடை கழியிடத்துச் சிறுமீன் உண்ணுது தாழையின் கிளையில் தனியே தங்கியிருக்கும் என்றும், கடற் காக்கை, கடுஞ் சூலுடைய தன் காமர் பேடை வெண்மணலொருசிறை யிருப்ப, அதற்குச் சேற்றிலுள்ள அயிரை மீனைக் கொண்டு கொடுப்பதற்காக ஆழ்ந்தகழியைத் துழாவுமென்றும், சேவலும் பெடையுமாகக் கூடியுள்ள நாரைகள் சிறுமீன்களைத் தேடிக்கொண்டு போய்க் கூட்டகத்துள்ள தம் பார்ப்பின் வாயிற் சொரியும் என்றுங் கூறப்பட்டுள்ளவற்ருல் பறவைகளின் காதற் சிறப்பும் அன்பின் பெருக்கும் விளங்குவனவாகும். காக்கை கழிதுழாவுதலும் நாரைகள் சிறுமீனைத் தேடுதலும், சூற் காக்கைக்கும் நாரைப் பார்ப்பிற்கும் ஏற்றனவற்றைப் பெறுதற்காகவெனக் கொள்க. அதனுல் வேறு பலவகைப் பட்டனவும் பெரியனவுமாகிய மீன்கள் நிறைய விருத்தல் உணரப்படும்.

"கள்ளக் குறளாய் மாவலியை
வஞ்சித் துலகங் கைப்படுத்துப்
பொள்ளைக் கரத்த போதகத்தின்
துன்பந் தவிர்த்த புனிதனிடம்
பள்ளச் செறுவிற் கயலுகளப்
பழனக் கழனி யதனுட்போய்ப்
புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும்
புள்ளம் பூதங் குடியானே"

—பெரிய திருமொழி 5 பத்து 1 திருமொழி 2 பாசுரம்.

என்ற பாசுரமும், 'பள்ளச் செறுவிற் கயலுகள' வெனக் கூறிப் பின் 'இரை தேடும்' என்றதென்னெனின், நீர்வளனுல் கயல்கள் பருத்துச் செருக்கித் திரிதலால் இளம்பார்ப்பிற்கேற்ற இரையைத் தேடுகின்றது தாய்ப் பறவை என்ற அதன் உரைக்கருத்தும் ஈண்டு நோக்கத்தக்கன.

"கடுஞ்சூல் வயவொடு கானலெய் தாது
கழனி யொழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடன்மீ னுெய்யும்" —263

என்ற பகுதியில் முடமுதிர் நாரை தன் முதிர்ச்சியும் நோக்காது, கடுஞ்சூலுடன் மருதத்தின்கட் டங்கியுள்ள தன்

பெடைக்கு அது விரும்பிய மீனை நெய்தல் நிலத்திற்கு வந்து தேடிக்கொண்டுபோய்க் கொடுக்கும் என்றதனால், அம் முடமுதிர் நாரையின் காதல் மிகப் பெரிதாதல் காண்க.

" கருங்காற் குருகின் கோளுய்ந்து போகிய
முடங்குபுற விறவின் மோவா யேற்றை
யெறிதிரை தொகுத்த வெக்கர் நெடுங்கோட்டுத்
துறுகடற் றலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉம்"

—211

என்ற பகுதியில் குருகு பிடிக்க முயன்றபோது அதற்குத் தப்பிச்சென்ற இருமீன் கடற்கரையிலுள்ள தாழைமலரைக் கண்டவுடன் தன்னைப் பிடிக்கவந்த குருகென்று அஞ்சும் என்றார். இதனால் ஒரோவழி மீன் குருகுக்குத் தப்பிவிடுதலும் உண்டு என்பதும், ஒன்றைக் கண்டு அஞ்சினால், அவ்வஞ்சப்பட்ட பொருளின் போலி கண்டவழியும், அவ்வச்சம் உண்டாகும் என்பதும் புலப்படும். ("கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்த விடத்து" எனத் திருக்குறளிற் கூறப்பட்டமை நினைவுகூர்தற்குரியது.)

ஒரு நாவற்கனியை அதன் நிறமும் வடிவமும் நோக்கித் தம் இனமென்று கருதி வண்டுகள் மொய்த்தன; அதனைப் பழமென்றுணர்ந்து ஒரு நண்டு வந்து கைக்கொண்டது; அது கண்டு வண்டுகள் யாழொலிபோல் ஆரவாரித்தன; இரைதேடும் நாரை ஒன்று ஆண்டு வர அந் நண்டும் அப் பழத்தைக் கைவிட்டகன்றது என்ற புனைவும், இதன்கண் அமைந்த உள்ளுறையும், நினையுந்தோறும் சுவை மிகப் பயத்தல் காண்க. (35 பா.) (நண்டு நாவற்கனியைத் தன் துணைக்குக் கொண்டு கொடுக்கும் என அகநானூறு 380, திருக்கோவையார் 84 இவற்றிலும் வந்துள்ளமை காண்க.)

## iv. உரிப்பொருள் நிகழ்ச்சி

(1) நெய்தற்கு உரிப்பொருள் இரங்கல் என்பது முன்னரே கூறப்பட்டது. குறிஞ்சி முதலிய திணைகட்குக் கூடுதல் முதலியவற்றை உரிப்பொருளாக விதித்தனரேனும், ஒரு திணைக்கு ஒருரிப்பொருள் சிறப்பாக உரியதென்றும், பிற

உரிப்பொருள்களும் அத்திணைக்கு வருமென்றும் கொள்ளு தல்வேண்டும். எல்லா உரிப்பொருள்களும் எல்லாத் திணை கட்கும் வருமேல் ஒவ்வொன்றை ஒவ்வொரு திணைக்குச் சிறப்பாகக் கூறியதென்னையெனின், ஒரு திணைக்குரிய பெரும்பொழுது சிறுபொழுதாகிய காலமும், கருப்பொருள் நிகழ்ச்சிகளும், அத் திணையின் உரிப்பொருளைச் சிறப்பித்து நிற்றலின் அங்ஙனங் கூறப்பட்டதென்க. உதாரணமாக — நெய்தலில் ஞாயிறு வீழ்பொழுதும், பறவைகள் இரை தேர்ந்து தம் துணையுள்ளித் திரும்புங் காட்சியும், கடலோசை யும், அன்றிலின் குரலும் முதலாயின பிரிந்த தலைவியின் ஆற்ருமையை மிகுவித்தலின், இரங்கல் அத்திணைக்குச் சிறப் பாக உரியதாதல் காண்க. இங்ஙனமே பிறவற்றிற்குங் கொள்க. தொல்காப்பியம், அகத்திணையியல் 12-ம் சூத்திர உரையில் நச்சிஞர்க்கினியர் ஐந்திணையுள்ளும் களவு நிகழு மென்று நக்கீரர் கருத்தைத் தாம் மேற்கொண்டு கூறி, 14-ம் சூத்திர உரையில் நான்கு நிலத்தும் புணர்ச்சி நிகழுமேனும், முற்பட்ட புணர்ச்சி புணர்தற் சிறப்புடைமையின் குறிஞ்சி என்று அதனை முற்கூறிஞர் என உரைப்பாராயினர். களவு எல்லா நிலத்தும் நிகழும் என்ருற்போலப் பிற நிகழ்ச்சி களும் எல்லா நிலத்தும் நிகழுமெனக் கோடலே பொருத்த முடையதாகும்.

சொல்லாசிரியர் கருத்து இங்ஙனமிருத்தற்கேற்ப, இந் நற்றிணை நெய்தற் பாக்களில் பிரிந்த தலைவி இரங்கலேயன் றிப் பகற்குறி வந்து மீள்கின்ருனை நோக்கித் தலைவி கூறு தல், அங்ஙனம் வந்தவனைத் தோழி வரைவு கடாதல், தோழி தலைமகளை முகம்புகுதல், இரவுக் குறி நயப்பித்தல், தலைவன் சிறைப் புறமாகத் தோழி கூறுதல், அங்ஙனந் தலைவி கூறுதல், தலைவனைச் சேட்படுத்தல், பின்னின்ற தலைவன் தோழி கேட்பத் தன்னுள்ளே கூறுதல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு வலித்தல், வரைவுமலிந்துரைத்தல், மீள்கின்ற தலைவன் பாகற்குரைத்தல், பாணற்கு வாயின் மறுத்தல் முதலிய பல துறைப்பொருள்கள் வருவனவாயின. எனினும், இவற்றுள் பெரும்பாலும் இரங்கற் குறிப்புக் காணப்படுதல் கருதத்தக்கதாகும். உலகவியற்கையில் இன் பத்திடையிடைத் துன்பங் கலந்து நிற்றல் போல, இவ்வுரிப் பொருள் நிகழ்ச்சியிலும் இடை இடையே இரங்கல் கலந்து நிற்றல் இயல்பேயாகும்.

மேற்கூறப்பட்ட உரிப்பொருள் நிகழ்ச்சி ஐந்தற்கும் அன்பே காரணமாகும். கூடுதற்கு அன்பு காரணமாதல் போலப் பிரிதற்கும் அன்பே காரணமாகும்; பிரிந்தவர் இரங்குதற்கும் ஊடுதற்கும் அன்பே காரணமாகும். அன்பு மூலகாரணமாக நின்று உரிப்பொருள் ஐந்தும் ஒன்ரு டொன்று தொடர்பு பெற்று இயங்கும்படி செய்கின்றது. தலைவன் தலைவியைப் பிணைத்து நிற்கும் இவ்வன்பு சிறப் பாகக் காதல் எனப்படும். இந் நற்றிணை நெய்தற் பாக் களிற் காதலின் சிறப்புப் பலவாருக உரைக்கப்பட்டுள் ளது.

"துறைவனெஞ், சிறிய நெஞ்சத் தகல்வறி யானே"
—388

என்றதனுற் றலைவனைக் கூடியபின் தலைவி அவனை மறந் தறியே னென்றனள். அங்ஙனம் மறவாத் தன்மையால் அவ னைப் பிரிந்த நிலையிற் றுயிலின்றி வருந்துபவள் ஒருகாற் றுயில்கூடின் அவனைப்பற்றியே கனவு காண்பாளாயினள். தலைவன் தன் நெஞ்சத்திருப்பினும் புறத்தே காணப் பெரு மையால்,

"சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
.......................................
உரவுநீர்ச் சேர்ப்பனெடு மணவா வூங்கே"
—31

"தண்குடி வாழ்ந ரங்குடிச் சீறூர்
இனிதுமன் றம்ம தானே......
தேரோர் நம்மொடு நகாஅ வூங்கே"
—135

எனத் தலைவனெடு கூடியபொழுது பொலிவொடு தோன்றி இன்புறுத்திய பொழில் முதலாயின அவனைப் பிரிந்த பொழுது பொலிவின்றி வெறுப்பாகத் தோன்றித் துன் புறுத்துவனவாயின. இந் நிலைவு தலைவனுக்கும் ஒக்கும் (101), மற்றும் "இதுவே, நறுவீ ஞாழன் மாமலர் தாஅய்" என்ற 96-ம் பாடலில் தலைவி, வெண்மணல் பரந்த புன்னை யம் பொழிலைச் சுட்டி இது, தலைவன் நம்மொடு புதுவது

புணர்ந்த பூம்பொழில் என்றும், கடற்றுறையைச் சுட்டி உது, தலைவன் நம்மொடு நீர் விளையாடிய துறை யென்றும், நறுந்தளிர் பொதுளிய கானலொன்றைச் சுட்டி அது, தலைவன் நமக்குத் தழையுடை யணிந்து பிரிந்த இடம் என்றும் ஓவ்வொன்றையும் அவ்வவ்விடத்து நிகழ்ந்த நிகழ்ச்சியுடனினைந்து உள்ளுருகி உடல் பசப்பூரப் பெறுவாளாயினள்.

“மணங்கமழ் கான லியைந்தநங் கேண்மை
ஒருநாள் பிரியினு முய்வரிது”

—203

“காமர் சிறுகுடி புலம்பினு மவர்காண்
நாமில மாகுத லறிதும்..........
நளிகடற் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே”

—299

எனத் தலைவனை யின்றித் தான் உயிர்வாழ்தல் இயலாதென்றும், ஒருகால் தலைவன் தன்னை வரையாதொழியின், இளநல மிற்கடை யொழியத் தனியே மூத்தொழிதலன்றிப் பிறர் வரைவுக் குடன்படுதலின் றென்றும் (295), பழநல மிழந்து பசலை பரக்கப் பெற்று இறப்பேனாயினும் தலைவனைப் புலவே னென்றும் (219),

விரிநீர்,
வையக வரையள விறந்த
எவ்வ நோய்”

—130

எனக் கூறப்படுதலால் தன் பிரிவுத் துன்பம் கடலினும் நிலத்தினும் பெரிது என்றும் கூறப்பட்டுள்ளனவற்றால் தலைவியின் காதல் நிலை நன்குணரப்படும். தலைவியின் பிரிவுத் துன்பம் கடலினும் நிலத்தினும் பெரிது என்றதனால், அதற்குக் காரணமான காதலும் கடலினும் நிலத்தினும் பெரிதென்பது கொள்ளப்படும்; காதலுக் கேற்பவே பிரிவிற்றுன்பம் நிகழுமாதலின் மற்றும் நீரும் நிலமுமாகிய இரண்டு பூதங்களைக் கூறவே இலக்கணையால் ஐம்பூதங்களினும் பெரிது அவள் காதல் எனக் கோடலும் பொருந்தமுடையதே. இங்ஙனம் காதலால் நிகழும் பிரிவுத் துன்பம் சொல்

லால் அளந்துரைக்குந் தரத்ததன்று எனவும் ஓரிடத்துணர்த் தப்பட்டுள்ளது.

"கருங்கால் வெண்குரு கெனவ கேண்மதி
பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை
யதுநீ யறியி னன்புமா ருடையை
நொதுமல் நெஞ்சங் கொள்ளா தென்குறை
இற்றுங் குணர வுரைமதி"

—54

இதன்கண் தலைவி குருகை நோக்கி, 'தோன்றியுள்ளது சிறு புன்மாலை; என் குறை இற்று; இதனைத் தலைவன் உளங் கொள்ளுமாறு உரைத்தி' என்றனள். தன் துன்பம் இன்னது இவ்வளவிற்று எனத் தன் உரையால் விரித்துரையாது 'இற்று' எனச் சுட்டிக் காட்டி, அதனைக் குருகு உணர்ந்து, தன் ஆற்றலால், தன் சொற்களால் தலைவன் உளங்கொள்ளு மாறு உணர்த்தல் வேண்டுமெனக் குறித்தனள். இதனால் அவள் துன்பம் சொல்லால் உரைக்குந் தரத்ததன்றென்பது பெறப்படும். அத்தகைய துன்பத்தைக் குருகு எங்ஙன முரைக்குமெனின், அவள் ஆர்வ மிகுதி அங்ஙனங் கூறச் செய்கின்றதெனக் கொள்ளுதல் பொருத்தமாகும். மற்றுமிச் செய்யுளில் "இற்றுங்குணர வுரைமதி" என்றனளேயன்றி உரைத்துத் தலைவனை யழைத்து வருகவென்றிலள். இதனால் தலைவன் மனங்கொளத் தன் துன்பம் உரைப்பாரில்லை; உரைப்பின் உடனே தலைவன் தன்பாலெய்தித் தன் துன்பம் நீக்குவன் என்னும் துணிவு பெரிதுடையவள் தலைவி என்ப தும் பெறப்படும். தலைவனாலுண்டான துன்பத்தை "இது முருகணங்கியதா லுண்டாயிற்று" எனப் பிறர் பிறிது காரணமிட்டுக் கூறுவராயின், அது பெரும்பழியாகக் கருது தல் தலைவியின் இயல்பாகும். இன்பத்திலும் துன்பத்திலும் தலைவனியையே தலைவி விரும்புவதாகும். தலைவனால் தான் பெருந்துயருற்ற காலத்தும் அவனுக்குப் பழியுந் துன்பமும் வராதிருக்க முயலுதலும் தலைவியின் இயல்பாகும்.

"துறந்தோர் தேஎத் திருந்துநனி வருந்தி
யாருயி ரழிவ தாயினும் நேரிழை
கரத்தல் வேண்டுமான் மற்றே பரப்புநீர்த்

தண்ணந் துறைவன் நாண
நண்ணார் தூற்றும் பழிதா னுண்டே”

—382

இதன்கண், தலைவன் பிரிந்தவிடத்து அவனைக் கருதி வருந்துந் தலைவி அக் காதல்நோய் புறத்தார்க்குப் புலனாயின், அது கண்டு அயலார் அலர் கூறுவர்; அதனாற் றலைவனுக்குப் பழியுண்டாகும்; அங்ஙனந் தலைவன் நாணும்படி அவனுக்குப் பழியுண்டாகாதிருத்தற்பொருட்டுத் தன் நோய் புறத்தார்க் குப்புலனாகாது மறைத்தல் வேண்டுமெனத் தலைவி விரும்புதல் காண்க.

“அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்”

சீதாபிராட்டி இராமபிரான் வில்வீரத்திற்குக் குறையெய்தா திருத்தற்பொருட்டுத் தன் கற்பின் ஆற்றலால் இலங்கையை யழித்துத் தன் சிறைத் துன்பத்தைத் தானே நீக்கிக்கொள்ள விரும்பாது, அவர் வந்து பகை தொலைத்துத் தன்னைச் சிறை மீட்டலைக் கருதித் தான் துன்புற்றிருந்தனள் எனக் கம்பர் கூறிய கவியின் கருத்து இங்கு நோக்கத் தக்கதாகும்.

“பெருந்தோ ணெகிழ வவ்வரி வாடச்
சிறுமெல் லாகம் பெரும்பசப் பூர
வின்னே மாக வெற்கண்டு நாணி
நின்னொடு தெளித்தன ராயினு மென்னதூஉம்
அணங்க லோம்புமதி வாழிய நீயெனக்
கணங்கெழு கடவுட் குயர்பலி தூஉய்ப்
பரவினம் வருகஞ் சென்மோ தோழி”

—358

தோழி கூற்றாகிய இச்செய்யுளில் தங்கள் உடல் மெலிந்து, அழகிழந்து, பசலை பரக்கப்பெற்று வருந்தினும், தலைவன் சூள் பொய்த்ததனால் அவனுக்குத் தீங்கு வராதிருத்தற் பொருட்டு, அவன் சூளுரைத்த கடவுட்கு வழிபாடு செய்ய முயலுதல் காண்க. இக் காதல்நோய் மிக்கவிடத்து ஊராரை

யும், அன்னையையும், ஒரோவழித் தலைவனையும் அறனிலா தார் என வெறுத்துக் கூறுதலும் உண்டு.

"அழுங்க லூரோ வறனின் றதனால்
அறனி லன்னை யருங்கடிப் படுப்ப"
—63

"தான்யாங் கென்னு மறனி லன்னை"
—145

"அறனி லாளன் புகழவெற் பெறினும்"
—275

என வருவன காண்க. இங்ஙனந் தலைவனை அறனிலாளன் எனக் கூறுதலே யன்றி,

"கண்டல் வேலிநுந் துறைகிழ வோற்கே"
—54

"யாரை யெலுவ யாரே நீயெமக்
கியாரையு மல்லை நொதும லாளனை"
—395

எனத் தலைவனைத் தம்மினும் வேறாக அகற்றி யுரைத்தலும்

"மடவை மன்ற கொண்க வயின்றோ
றின்னு தலைக்கு மூதையொ டோரு
நும்மில் புலம்பின் மாலையு முடைத்தே"
—183

என அறியாமையுடையை என்றுரைத்தலும் ஒரோவழி உண்டு. தலைவனை இயற்பழித்தல் பெரும்பாலும் தோழி கூற்றாக வரும். இங்ஙனம் ஒரோவழித் தலைவனைத் தோழியும் தலைவியும் வெறுத்துரைப்பினும் பிறரால் அவனுக்குப் பழி வராதிருக்கவே தாம் முயல்வாரெனக் கொள்க. பிரிந்து வருந்தும்போது தலைவன் வந்து தன் துன்பம் போக்காவிடினும்,

"துணைபுண ரன்றி லுயவுக்குரல் கேட்டொறுந்
துஞ்சாக் கண்ணள் துயரடச் சாஅய்

நம்வயின் வருந்தும் நன்னுத லென்பது
உண்டுகொல் வாழி தோழி"

—303

என்ற செய்யுளிற் கூறியபடி தலைவன் "நம் தலைவி நம் பிரிவினால் துயிலின்றி, அன்றிலின் குரல் கேட்குந்தோறும், நம்மை நினைந்து வருந்துவள்" என நினைந்தான் என்று அறியப் பெறின் அதுதானும் தன் துன்பத்தைத் தணிப்பதாகும் எனத் தலைவி நினைவாளாயின் அவள் காதல் வன்மையை அளந்துரைத்தல் இயல்வதாமோ? 130-ஆம் பாடலிலும் இக் கருத்து வருதல் காண்க. துன்புற்ற ரொருவரை அவர் மாட்டு அன்புற்றார் சென்று அத் துன்பம்பற்றி உசாவின் அவர் துன்பம் சிறிது தணியப் பெறுதல் உலகியலில் காணப் படுவதொன்றாகும். தலைவன் தலைவியைப் பெறுதற்காக அவள் தோழி விரும்புவனவற்றைச் செய்து கொடுப்பதனால் அத் தலைவியைக் கூடியவன்போல் மகிழ்ச்சி யடைகின்றான் எனக் "கடுந்தே ரேறியுங் காலிற் சென்றும்" என்னும் செய்யுளிற் கூறப்படுவதனால் அவன் காதற் சிறப்பு விளங்குவதாகும்.

## தலைவன்-தலைவியைப் பற்றிய வேறு சில குறிப்புக்கள்

(2) தலைவன் தலைவியைக் கருதிக் குறியிடத்து வரும் பொழுது தானும் தேரும் பாகனுமாக வருதலேயன்றி ஒரோ வழி வேறு இளைஞர் சிலரோடு வருதலும், தலைவன் தேரிற் குதிரையே யன்றிச் சிறுபான்மை கோவேறு கழுதை பூட்டப்படுதலும் உண்டு. (307, 278-ஆம் பாடல்களிற் காண்க.) தொல்-பொருளியல் 18 சூ.

"தேரும் யானையுங் குதிரையும் பிறவு
மூர்ந்தன ரியங்கலு முரிய ரென்ப"

என்பதனுரையில் நச்சினார்க்கினியர் பிறவென்பதனாற் கோவேறுகழுதை பூட்டப்படுதலும் உம்மையால் இளைஞரோடு வந்து தனித்துக் கூடுதலும் கொண்டனர். பிரிந்து மீண்டு வருந் தலைவன் மிக விரைந்து வருதல் சில செய்யுட்களிற் கூறப்பட்டுள்ளன.

"கோட்சுறா வழங்கும்"

என்னும் பாடலில்,

"கேட்டிசின் வாழி தோழி தெண்கழி
வள்வா யாழி யுள்வாய் தோயினும்
புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா
வலவன் கோலுற வறியா
வுரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக் குரலே"

—78

எனப் பொன்னாற் செய்யப்பட்ட சேணம் முதலியவற்றை யுடைய குதிரை, தெளிந்த நீர்க் கழிகளிற் றேரின் சக்கரம் மிக அழுந்தினும், பறவை பறந்தாற்போலத் தன் விரைவிற் குறையாது வரும்படியான செருக்குடைய தென்றும், அப்போதும் வலவனுற் கோல் கொண்டு தூண்டப் பெறுத தென்றும் தலைவன் செல்வச் சிறப்பும், அவன் குதிரையின் ஆற்றலும், விரைவும் ஒருங்கு கூறப்பட்டிருத்தல் காண்க.

"கழிச்சே றாடிய கணைக்கா லத்திரி
குளம்பினும் சேயிறு வொடுங்கின
கோதையு மெல்லாம் ஊதைவெண் மணலே"

—278

என்ற பாடலில் நீர்க்கழிகளின் சேற்றை மிதித்து வருதலாற் றலைவன் தேரிற் பூட்டப்பட்ட அத்திரிகளின் குளம்புகளில் இறுமீன்கள் படிந்துள்ளன வென்றும், தலைவ னணிந்த மாலை முதலிய வெல்லாவற்றிலும் காற்றுலெறியப்படும் மணல் படிந்துள்ள தென்றும் அத்திரியின் ஆற்றலும், தன் வருத்தம் நினையாது வரும் தலைவனது காதற் சிறப்பும் ஒருங்கு கூறப்பட்டன. (அத்திரி=கோவேறு கழுதை)

"பனிபடு,
பல்சுர முழந்த நல்கூர் பரிய
முழங்குதிரைப் புதுமண லழுந்தக் கொட்கும்
வாலுளைப் பொலிந்த புரவி"

—135

என்ற பாடலில் தலைவன் தேர்பூண்ட மா, பனி பொருந்திய பல காடுகளைக் கடந்து வந்தமையாலும், அப்பொழுதுதான் புதிதாகக் குவிக்கப்பட்ட மணலில் தேர்ச் சக்கரம் அழுந்தியதாலும் சுழலுவதாயிற்று என அக் குதிரையின் சுழற்சிக்குக் காரணம் கூறப்பட் டிருத்தல் காண்க.

"புலிப்பொறிக் கொண்ட பூநாறு குரூஉச்சுவல்
வரிவண் டூதலிற் புலிசெத்து வெரீஇப்
பரியுடை வயங்குதாள் பந்திற் றாவத்
தாங்கவும் தகைவரை நில்லா வாங்கண்"

—249

என்ற பாடலில், புன்னை நறுந்தாது தன்மேற் படியப்பெற்ற தால் புலியின் தோற்றத்தோடு ஒலிக்கின்ற வண்டுகளைக் கண்டு அஞ்சிய குதிரை, வலவன் இழுத்து நிறுத்தவும் நில்லாது செல்லும்போது, அதன் கால்கள் அடித்தெழு பந்து போல் தாவுகின்றன வென்றதால், அக் குதிரையின் ஆற்ற லும், அதன் இயற்கைக் குணமாகிய எளிதில் அஞ்சும் தன்மையும் ஒருங்கு கூறப்பட்டன.

"பால்திரண் டனைய மெய்ய
பயந்திரண் டனைய நெஞ்ச
கால்திரண் டனைய கால
கடுநடைக் கலினப் பாய்மா"

(—இரா. அயோ. குகப்படலம், 52)

என்னும் கவியில் குதிரைகள் எளிதில் அஞ்சுமியல்பின என்னுங் கருத்தால் "பயந்திரண் டனைய நெஞ்ச" என்று கம்பர் கூறுதல் காண்க.

இங்ஙனம் பேராற்றலும் பெருவிரைவுமுடைய குதிரை பூண்ட தேரேறித் தலைவன் வருவானென ஒருபாற் கூறப்பட் டிருக்க, அத்தகைய தேரின்மேல் வரும்போதும் அருள்மிக வுடையனாக மற்றொருபாற் கூறப்பட்டுள்ளனன்.

"புணரி பொருத பூமண லடைகரை
ஆழி மருங்கின் அலவ னோம்பி
வலவன் வள்பாய்ந் தூர
நிலவுவிரிந் தன்றாற் கான லானே"

—11

தோழி கூற்றாகிய இதன்கண் தலைவன் ஏறிவரும் தேரைச் செலுத்தும் வலவன், அத் தேரின் சக்கரத்தில் நண்டு கள் அகப்பட்டு இறந்து விடாதபடி, வாரைப் பிடித்துக்

குதிரையைத் தாங்கி நண்டுகளை அப்புறப்படுத்திச் செலுத்து தற்கு உதவியாக நிலவு விரிந்தது எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. வலவன் அங்ஙனம் செலுத்துவான் எனக் கூறப் பட்டிருப்பினும், தலைவன் கருத்து அதுவாகலின் அவன் அங் ஙனம் செலுத்துவானுயினன் எனக் கோடலே பொருத்தமா கும். தலைவன் தன் இன்னுயிர்க் காதலியைக் காண்பான் விழைந்து, கடுமாப் பூண்ட நெடுந்தேரூர்ந்து, உள்ளத்தினும் விரைந்து செல்லும் இந்நிலையினும் இங்ஙனம் செல்வான் எனின், அவன் அருள் மிகச் சீரியதொன்றன்றோ? இக்கா லத்துப் பெரிய நகரங்களில், எந்திர ஊர்தி ஏறித் தம் முன் வருவார் போவார் தம்மையொத்த மக்கள் என்று சிறிதும் நினையாது, அவர்கட்கு ஊறுபாடுண்டாகுமாறு மிக விரை யச் செலுத்திச் செல்வார் சிலர் மனப்பான்மைக்கும், மேற் காட்டப்பட்ட தலைமகன் மனப்பான்மைக்கும் உள்ள வேற் றுமையை அன்பர் தம் அறிவுக்கோலால் அளந்துணர்வார் களாக.

தோழியும் தலைவியும், இரவுக் குறிக்கண் தலைவன் வரும் போது தாங்கள் ஓரிடத்து மறைந்திருந்து அவன் தம்மைக் காணுது வருந்துதலைத் தாம் காண விழைதல் உண்டு (307). இஃதொரு விளையாட்டு நிகழ்ச்சி போலும்.

"விளையா டாயமொடு வெண்மணை லழுத்தி
மறந்தனந் துறந்த காழ்முளை யகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்
றன்னை கூறினள் புன்னையது சிறப்பே
யம்ம நாணுதும் நும்மொடு நகையே"

—172

இதன்கண் தலைவி புன்னையைச் சிறப்பாக வளர்த்தலும், தாம் வளர்த்த புன்னையைத் தம்மோடு உறவு முறையுடைய தாகக் கருதுதலும், அக்கருத்தால் அதன் நீழலில் தலைவனோடு கூடிமகிழ்தற்கு நாணுதலும் கூறப்பட்டுள்ளன. இதனுல் தலைவியின் நாண மிகுதி நன்கு தெளியப்படும். தாம் வளர்ப் பனவற்றைத் தம்மோடு உறவுமுறையுடையனவாகக் கரு துதல் உலகியற்கையாகும். திருவாய்மொழியில்

"என்மின்னு நூல்மார்வன் என்கரும்
பெருமா னென்கண்ணன்
தன்மன்னு நீள்கழல்மேல் தண்டுழாய்
நமக்கன்றி நல்கான்
கன்மின்க ளென்றும்மை யான்கற்பி
யாவைத்த மாற்றம் சொல்லிச்
சென்மின்கள் தீவினையேன் வளர்த்தசிறு
பூவைகளே"

**ஆறும் பத்து, 8-ஆம் திருவாய்மொழி ஆறும் பாசுரம்.**

என்ற பாசுரத்தில் தலைவனிடத்துப் பூவையைத் தூதுவிடக் கருதிய தலைவி, அது தான் வளர்த்த பூவையாக விருத்தல் பற்றி அதனைத் தன் பிள்ளையாகக் கருதி, அதனைத் தூது விடும்படி தனக்குண்டான நிலைமை தன் தீவினைப் பயனே யாகுமெனக் கொண்டு "தீவினையேன் வளர்த்த சிறுபூவை களே" எனக் கூறி யிருத்தல் காண்க. உங்களைக் கொண்டு காரியங் கொள்ளும்படியான பாவத்தைப் பண்ணினேன்; வயிற்றிற் பிறந்தாரைக் கொண்டு காதலனை யழைத்துக் கொள்வதைவிடப் புன்மை யில்லையே என்ற அதன் வியாக்கி யானக் கருத்தும் காண்க.

தலைவி, தலைவன் வரும்போது எதிர்தொழுது போம் போது புறந்தொழுதல் இயல்பென்பர். இக் கருத்து,

"மெய்ம்மலி காமத் தியாந்தொழு தொழியத்
தேரும் செல்புற மறையும்"
—187

என்ற செய்யுளிற் புலப்படுத்தப்பட்டுள்ளது.

196-ஆம் பாடலில் தலைவி, திங்களை நோக்கி "நீ சால்பும் செம்மையு முடையை, உனக்குத் தெரியாதபடி மறைந் திருக்கும் பொருள் உலகத் தொன்று மின்று. ஆதலால் எனக் குத் தோன்றாது மறைந்தொழுகும் என் காதலரிருக்கு மிடத்தை எனக்குக் காட்டுக" என்று கேட்டு அது காட்டா தொழியவே, "நீ அறிகரி பொய்த்தலினால், தலைவனைப் பிரிந்து கவினிழந்த என் தோள்போல் நாளுக்குநாள் குறை கின்றாய் நீ எங்ஙனங் காட்டுவாய்" எனக் கூறுகின்றனள்.

இங்ஙனங் கூறுதற்குக் காரணம் தலைவியின் ஆற்ருமை மிகுதியே யாகும்.

"விண்டலை யாவர்க்கும் வேந்தர்வண்
டில்லைமெல் லங்கழிசூழ்
கண்டலை யேகரி யாக்கன்னிப்
புன்னைக் கலந்தகள்வர்
கண்டிலை யேவரக் கங்குலெல்
லாமங்குல் வாய்விளக்கு
மண்டில மேபணி யாய்தமி
யேற்கொரு வாசகமே"

—திருக்கோவை, 177

என்பதிலும் இங்ஙனம் மதியை வினவுதல் காண்க. (மேற் காட்டப்பட்ட 196-ஆம் பாடலில் "சிறுகுபு சிறுகுபு செரீஇ" என்றிருப்பது "சிறுகுபு சிறுகுபு சேறி" என்றிருந்தால் பொருத்தமாகவிருக்குமென் றெண்ணுகின்றேன்.) 239-ஆம் பாடலில்,

"மல்ல லிருங்கழி மலிநீர்ச் சேர்ப்பற்
கமைந்து தொழில்கேட் டன்ரே விலமே"

என்ற பகுதியால் தலைவனுக் கடங்கி அவனுக்கு ஏவல் செய் தொழுகும் மனப்பான்மை யுடையள் தலைவி என்பது அறி யப்படும்.

"பெருங்கடற் பரப்பி னமர்ந்துறை யணங்கோ
இருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை என்றனெ னதனெதிர்
முள்ளெயிற்று முறுவலுந் திறந்தன
பல்லித ழுண்கணும் பரந்தவாற் பனியே"

—155

இதன்கண் இருசுவைகள் ஒருங்கமையக் கூறப்பட்டன. பரத்தையிற் பிரிந்த தலைவன் திறத்துத் தலைவி ஊடல் கொண்டிருந்தாளாகத் தலைவன் அவளை யணுகி யூடல் தீர்க்க முயன்றபோது, பரத்தையிற் பிரிவுபற்றித் தலைவி யுள்ளத்துக் கிளர்ந்த வருத்தத்தால் கண்ணீர் தோன்றவும்

காதல் மிகுதியானும், கற்பின் திறத்தானும் "நம்மை மறந் தாரை நாம்மறக்க மாட்டேமால்" என்றாற் போன்று எங்ஙனமாயினும் தலைவனை நீக்கி யொழுகுந் தன்மையளல்ல ளாகலின் முயங்கல் விருப்புடையளாய் முறுவல் தோன்றப் பெற்றனள். அதனால் உவகையும் அழுகையும் ஒருங்கு தோன்றின. இங்ஙனம் தக்க இடம் நோக்கிப் பொருத்த மாக முரண்பட்ட இன்சுவைகளை யொருங்கமைத்தல் சிறந்த கவிஞர் சிலர்க்கே இயைவதாகும். தன் தம்பி அட்சகுமா ரன் இறந்து கிடத்தலைக் கண்ட இந்திரசித்து,

"கையின் வீரச் சிலையுக வயிரச் செங்கண்
நீருகக் குருதி சிந்த நெருப்புக வயிர்த்து நின்றான்"
—கம்ப. சுந்த. பாசப்படலம், 21.

எனக் கம்பர் அழுகையும் வெகுளியும் ஒருங்கமைத்துக் கூறுதல் காண்க.

கோவை நூல்களில் "இடமணித் தென்றல்" என ஒரு துறையுண்டு. முதற் கூட்டத் திறுதியிற் பிரியக் கருதும் தலைவன், தலைவி ஆற்றி யிருத்தற்காகத் தன்னூர் தலைவியின் ஊருக்கு மிக அணித்தென்று கூறிப் பிரிவான்.

"கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்
தெண்கடல் நன்னாட்டுச் செல்வன் யானென
வியங்கொண் டேகினை யாயின்"
—363

என்ற பகுதியில் தலைவன் நாடுகூறிச் சென்றமை கூறப் பட்டது. அதனால் தன் ஊரணிமை குறிப்பாகப் புலப்படுத் தினன் போலும். இப் பகுதி,

"பொன்னலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலி னூடே
புனலரங்க மூரென்று போயி னாரே"
—திருமங்கைமன்னன் திருநெடுந் தாண்டகம், 25

என்ற திருமங்கைமன்னன் வாக்கை நினைவுறுத்துகின்றது.

## அலர் கூறுதல்

(3) தலைவன் தலைவியரிடை நிகழும் களவொழுக்கத்தை ஊரிலுள்ள மகளிர் ஒருவாற்றா னுணர்ந்தவிடத்து அதுபற்

றித் தங்களுக்குள் அவர்களைப் பழித்துரைப்பர். இது மறைவாக நிகழும் தொடக்க நிலையில் அம்பலெனவும், வெளிப்படக் கூறும் முதிர்ந்த நிலையில் அலரெனவும் கூறப்படும்.

" சிலரும் பலருங் கடைக்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தன ளன்னை யலைப்ப
வலந்தனென் வாழி தோழி "

—149

என்ற இப்பகுதியில் தொடக்க நிலையாகிய அம்பல் மிக அழகாகக் கூறப்பட்டுள்ளது. தெருவிலுள்ள பெண்டிர் சிலரும் பலருமாக ஆங்காங்கே கூடி நின்று, தலைவியைச் சுட்டி "இவளுக்கு ஒருவனோடு மறைவிற் கூட்டம் நிகழ்ந்துளது போலும்" எனத் தங்களுக்குள் இகழ்ந்து உரையாடுவாராயினர். அங்ஙனந் தலைவியைச் சுட்டுதலும் தமக்குள் உரையாடுதலு மெல்லாம் வாய்ச் சொல்லின்றிக் கடைக்கண் ணோக்காலேயே நிகழ்த்தினர். நோக்கு வேறுபாட்டால் உள்ளக் கருத்தை யுணர்த்துதலும் அதனை யுணர்தலும் திறனுடையார் செயலாகும்.

" சேரி சேரா வருவோர்க் கென்றும்
அருளல் வேண்டு மன்புடை யோயெனக்
கண்ணினி தாகக் கோட்டியுந் தேரலள் "

—342

எனத் தலைவிக்குத் தன் கருத்தைத் தோழி கண் குறிப்பால் உணர்த்தியதும்,

" அன்னை, தானறிந் தன்றோ விலளே பாணர்
சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்
சுடுவான் போல நோக்கும் "

—175

எனத் தோழி, அன்னையின் உள்ளத்திலுள்ள வெகுளியை அவள் நோக்கினா லறிந்துகொண்டதும் கூறப்பட்டிருத்தல் காண்க.

"பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங்
கண்ணின்,
வகைமை யுணர்வார்ப் பெறின்"

என்ற திருக்குறட் கருத்து இங்கு நோக்கத்தக்கதாகும். (மேற் காட்டப்பட்ட 149-ம் பாடற் பகுதிக்குத் தலைவியைக் கடைக் கண்ணுற் சுட்டி வாயினுல் உரையாடுகின்றனர் என்றும் கூறு வர்.) வியப்புத் தோன்றுமிடத்து மூக்கின் நுனியிற் சுட்டு விரல் வைத்துப் பேசுதல் உலகியல்பு. இங்குத் தலைவி உயர்குடிப் பிறப்பினளாதலின் அவள் திறத்துச் சேரியம் பெண்டிர் மூக்கினுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி வியந்துரைப் பாராயினர். இந்நிலை அம்பல் எனக் கூறப்பட்டது. இதன் முதிர்ந்த நிலையில் "மறையாது, ஊரலர் தூற்றுங் கௌவை யும்" (263) என மறையாது வெளிப்படப் பழித்துரைத் தலும், அங்ஙனங் கூறுதல் அலர் எனப் பெயர் பெறுதலும் காண்க.

"அறிந்தோ ரறனிலர் என்றலர் சிறந்த
இன்னுயிர் கழியினும் நனியின் னுதே"
—227

என்ற பகுதியில் "அறிந்தோர் எனக் கூறப்படுபவர், களவு தீதென்றறிந்து வைத்தும் அவ்வழியி லொழுகுதலால் அற னில்லாதவரேயாவர்" எனக் கூறித் தூற்றுகின்றனர் என்று அலர் தூற்றுவார் கூறும் கருத்தும் கூறப்பட்டிருத் தல் காண்க. இங்ஙனம் அலர் கூறுவாருடைய ஆரவாரம் உப்பு வாணிகர் உப்பு வண்டியைச் செலுத்துமிடத் துண்டா கும் ஆரவாரம் போன்றதென 354-ம் பாடலிற் கூறப்பட் டுள்ளது.

"அலர்வாய், அயலிற் பெண்டிர் பசலை பாட"
—378

என வருவதால் தலைவியின் பசலையைக் குறித்து அலர் கூறு வார், பாட்டாகவும் பாடுவர் போலும். 249-ஆம் பாடலில் "அம்பன் மூதா ரலரெழ" என அம்பலும் அலரும் ஒருங்கு கூறப்பட்டன.

## V. அகப்பொருட் பாடல்களில் வரும் பிற நிகழ்ச்சிகள்

புலவர்கள் அகப்பொருட் பாடல்களைப் பாடுங்கால் தமிழ் நாட்டு மன்னர்கள் வள்ளல்களின் ஊர்கள் செய்திகள் இவற்றை இயைத்துப் பாடியிருத்தலைத் தொகை நூல்களிற் பரக்கக் காணலாம். அங்ஙனமே இந் நற்றிணை செய்தற் பாடல்களிலும் பலருடைய ஊர்களும் செய்திகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. தலைவியின் அழகுக்குப் புலவர், தாம் கருதிய தலைவர்களின் ஊர்களை உவமை கூறுதல் வழக்கம். "துறை கெழு மாந்தை யன்னவிவள் நலம்" (35) எனத் தலைவியின் அழகுக்குச் சேரர் நாட்டுக் கடற்கரைத் துறைமுகமாகிய மாந்தை உவமை கூறப்பட்டது. இதற்கு மாந்தை தன்னை யடைந்தாரைத் தன் அழகினாலும் தன் பாலுள்ள நுகர் பொருட் சிறப்பாலும் பிறவூர்களை விரும்பாதபடி செய்யும் தன்மையதாதல் போல, தலைவியும் தன் நலங்களால் தன்னையடைந்த தலைவன் பிறரை நினையாதபடி செய்யும் தன்மையள் எனப் பொருள் கொள்க. இங்ஙனமே பிற ஊர்கள் உவமை கூறப்படு மிடங்களினுங் கொள்க. 258-ம் பாடலில் மருங்கூர்ப்பட்டினமும் 131-ம் பாடலில் பொறையாறும் உவமையாகக் கூறப்பட்டன. 38-ம் பாடலில் கண்டவாயில் என்ற ஊர் தலைவியின் ஊராகவே காணப்படுகின்றது. தலைவியின் அழகுக்கு ஊர் உவமை கூறப்பட்டதுபோல் தலைவன் பிரிவால் அவள் அழகழிதலுக்கு, 291-ம் பாடலில்,

"மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய வினநிரைப்
பல்லான் கிழவரின் அழிந்தவிவள் நலனே"

என முள்ளூர் மன்னனாகிய மலையமான் திருமுடிக்காரி இரவில் நிரைகவர்ந்த போது, அந்நிரைக்குரிய பகைவர் போரில் அழிதல் உவமையாகக் கூறப்பட்டது.

58-ம் பாடலில் வீரை வேண்மான் வெளியன் தித்தன் கூறப்பட்டுள்ளான். அதனுரையில் வெளியன் என்னும் தித்தன் என இரண்டும் அவனுக்குரிய பெயர்கள் போலக் கூறப்பட்டிருப்பினும், வெளியன் மகன் தித்தன் என்னும் பொருளில் வெளியன் தித்தன் என்பதை ஒரே பெயராகக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

87-ம் பாடலில் சோழர்குடியினனாகிய அழிசி என்பவனுடைய காட்டில் புளிப்புச் சுவையுடைய சிறந்த நெல்லிமரம் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. தலைவி யூரில் மாமரத்தில் தொங்கிக்கொண்டே தூங்கும் வெளவால் அந் நெல்லிமரத்தின் புளிப்புச் சுவை பெற்றதாகக் கனவு கண்டாற்போல என உவமை கூறப்படுதலின், அந் நெல்லிமரத்தின் சிறப்பும், அதனை வெளவால் பெற முடியாதபடி யுள்ள காவற்பெருமையும் ஒருங்குணரப்படும். இவ் வழிசி என்பவன் சோழநாட்டதாகிய ஆர்க்காடு என்னுமூரிலிருந்தவன் என நற்றிணை யுரையாசிரியர் கூறுகின்றனர். இவ்வார்க்காட்டுத் தெரு, கள் மிகுதியை யுடையது என 227-ம் பாடலில் கூறப்பட்டுள்ளது. (மேல் 87-ம் பாடலில், வெளவால் கனாக்கண்டதாகக் கூறியதைப் படைத்து மொழிதலாகக் கொள்ளுதல் பொருத்தம்; வெளவால் கண்ட கனவைத் தலைவி யறிதல் கூடாமையின்.)

131-ம் பாடலில் பொறையாறு என்ற ஊரில் வாழ்ந்த பெரியன் என்ற ஒரு வள்ளல் கூறப்பட்டுள்ளான். புறம் 391-ம் பாடல் பெற்ற பொறையாற்றுக் கிழான் என்பவன் இப் பெரியனே போலும்.

167-ம் பாடலில் வள்ளல் எழுவரில் ஒருவனாகிய ஆய் என்பவனுடைய கொடைப் பெருமை கூறப்பட்டுள்ளது. புன்னை மரத்திற் புதிதாக வந்து தங்கும் வெண் குருகின் ஆரவாரத்திற்கு ஆயின் நாளோலக்கத்தில் இரவலர் பரிசிலாகப் பெற்ற தேரின் ஒலி உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

195-ம் பாடலில், கடற்கரைப் பட்டினமாகிய தொண்டி நெல்வளமுடையதாகக் கூறப்பட்டுள்ளது.

270-ம் பாடலில்,

"வேந்த ரோட்டிய வேந்துவேல் நன்னன்
கூந்தல் முரற்சியிற் கொடிதே"

என நன்னன்

என்பான் செய்த கொடுஞ் செய்தியொன்றும் கூறப்பட்டுள்ளது.

395-ம் பாடலில் கடல் முழக்கத்திற்குக் கடும்பகட்டியானை நெடுந்தேர்க்குட்டுவன் போர்க்களத்துப் பகைவரை வென்றபோது எழுந்த முரசொலி உவமையாகக் கூறப் பட்டுள்ளது. இதனால் அம்முரசொலி கடலொலி யினும் பெரிது என்பது கிடைக்கும்.

### vi. உவமை நயம்

முன் பிற கருத்துக்கள் கூறியவழிச் சிலஉவமைகள் கூறப்பட்டன. வேறு சில நயமான உவமைகள் ஈண்டுக் கூறப்படும்.

தலைவிக்கு,

“ கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
மண்ணுறுப் பசுமுத்து ”

—94

உவமை கூறப்பட்டுள்ளது. முத்து, பெறுதற் கருமை யும், மிக்க ஒளியும், அணிவார்க்குத் தட்பஞ் செய்தலும் உடையது. அங்ஙனமே தலைவியும் பெறுதற் கருமையும், உறுப்பழகும் தோற்றப் பொலிவுமாகிய மிக்க வனப்பும், தலைவனுக்குப் பல வகையாலும் இன்பஞ் செய்தலும் உடை யள். ஒளிமிக்க அம் முத்து நன்கு கழுவப்படாமையால் ஒளியை மறைத்துக் காட்டினாற்போலத் தலைவி தலைவனோடு நிகழ்ந்த கூட்டத்தினாலுண்டான மிக்க நலனைப் புலப்படா மல் அரிதாகத் தாங்கிப் பெண்மையாற் றகைத்துக்கொண் டுள்ளனள் எனக் கொள்க. முத்து உலகத்தாரால் நன்கு மதிக்கப்படும் பெருமையுடையதாதல் போலத் தலைவியும் கற்பால் உலகத்தாரால் நன்கு மதிக்கப்படும் பெருமை யுடையள் என்பதும் குறிப்பாற் பெறப்படும். இத்தகைய தலைவியின் நலத்திற்கு,

“ கலிமடைக் கள்ளின் சாடி யன்னவெம்
மிளநல மிற்கடை யொழியச்
சேறும் வாழியோ முதிர்கம் யாமே ”

—295

என்பதில் கள் உவமை கூறப்பட்டுள்ளது. (கள்ளின் சாடி யன்னவெனினும் சாடியின்கண் உள்ள கள்ளன்ன

எனக் கொள்க.) தலைவியின் இளநலம், நுகருந் தலைவற்குப் பெருமகிழ்வளித்தலின், உண்பார்க்குப் பெருமகிழ் செய்யும் கள் உவமை கூறப்பட்டது. கள் தாழ்ந்த பொருளெனி னும் உண்பார்க்கு மகிழ்செய்தலாகிய குணம்பற்றி ஈண்டு உவமை கூறப்பட்டது. இங்ஙனம் பொருளின் தாழ்வு கருதாது அதன் குணங்கருதி உவமை கூறுதல் பண்டைத் தமிழ்ப் புலவ ரியல்பாதல் சங்க நூல்களிற் காணலாகும்.

"ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்"
**—புறம், 60.**

இதன்கண் அரசனுக்குப் பகடு உவமை கூறப்பட்டிருத் தலும், "இராச்சிய பாரத்தைப் பொறுத்து நடத்துமாறு நோக்கி நோன்பகட்டோடு உவமித்தமையின் இறப்ப விழிந்த ஆனந்த வுவமையன்றாயிற்று" என்ற அதன் விளக்க உரை யும், திருக்குறளிற் காமத்துப்பாலிற் பல விடங்களிற் கள் உவமை கூறப்பட்டிருத்தலும் காண்க.

267-ம் பாடலில் வெண்மணற் பரப்பில் உதிர்ந்து பரந் துள்ள செந்நிற ஞாழற்பூவின்மேல் நண்டுகள் கோடுண் டாகுமாறு ஓடுதல், தினைகாய வைத்த மகளிர் அதனைத் தம் கைகளாற் கோடுண்டாகுமாறு துழாவுதலை ஒத்துள்ள தென்று கூறப்பட்டது. (தினை நெய்தற் கருப்பொருளன் றாதலின் திணைமயக்கமாகக் கொள்க.)

"முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
யேமுற விளங்கிய சுடரினும்
வாய்மை சான்றநின் சொல்நயந் தோர்க்கே"
**—283**

எனத் தலைவன் வாய்மைக்கு ஞாயிறு உவமை கூறப்பட்டது. ஞாயிற்றின் இயக்கம் என்றும் பொய்த்தலின்மையின் அது தலைவன் வாய்மைக்கு உவமையாயிற்று. தலைவன் வாய்மை யின் சிறப்புத் தோன்றச் "சுடரினும் வாய்மை சான்ற" என்றார்.

"மையற விளங்கிய மணிநிற விசும்பிற்
கைதொழு மரபின் எழுமீன் போலப்

பெருங்கடற் பரப்பி னிரும்புறந் தோயச்
சிறுவெண் காக்கை பலவுட னாடும்"
—231

இதன்கண் கடலில் சிறுவெண் காக்கைகள் தம்முடல், கடல் நீரில் மறையத் தலைமட்டும் மேலே தோன்றவிருத்தல், நீலவானில் எழுமீன் (சப்தரிஷி) மண்டலம் தோன்றி விளங் குதல் போன்றிருந்ததென்றார். (சிறுவெண் காக்கை, கழுத்து வரையில் வெண்மையும் உடற்பகுதி கருமையுடையதாக விருக்கும் என அறியப்படுகின்றது.) அக் காக்கைகள் தங் கள் வெள்ளிய தலைகளை மேலே தூக்கி வாயைத் திறந்து கொட்டாவி விட்டாற்போல வெள்ளிய ஆம்பல், மலரும் (345) என்றனர்.

378-ம் பாடலில் கடல் அலை, புரண்டு அசைந்து வீழ்தல் நெடுநாட் புண்ணுற்று வருந்துவோர் புரண்டு வீழ்தல் போலுள்ள தென்றார்.

291-ம் பாடலில் நாரையின் கூட்டம் நெய்தலைக் கொழு மீன் அருநதுதற்காக வெண்மணல் மேட்டிற் றங்கி யிருத்தல், அரசனுடைய காலாட்படை பகைவர்பாற் பெறும் வெற்றியைக் கருதித் தங்கியிருத்தல் போன்ற தென்றனர்.

315-ம் பாடலில் பரதவர் பழைமையாய்த் தொழிற்காகாத படகைப் போற்றாது புன்னைமரத்திற் கட்டிவிடுதல், உழவர் முதிர்ந்து தொழிற்காகாத எருதைப் போற்றாது காட்டில் விட்டுவிடுதல்போலும் என்றனர்.

### vii. நிலம்பெயர்ந்துவமை கூறுதல்

"அத்த விருப்பைப் பூவி னன்ன
துய்த்தலை யிறவொடு தொகைமீன் பெறீஇயர்"
—111

இதில் நெய்தல் நிலத்துத் தோழி, "பாலைநிலத்திலுள்ள இருப்பை மரத்தின் பூவைப்போன்ற மெல்லிய தலையை யுடைய இறுமீன்" எனப் பாலைக் கருப்பொருளை உவமை கூறினள். இருப்பைப் பூவை யொத்த என வாளா கூறி

யிருப்பின் திணை மயக்கம் எனக்கொள்ளலாம். சுரத்தின் கண் உள்ள இருப்பைப் பூவினை யொத்த என்னும் பொருளில் "அத்த விருப்பைப் பூவி னன்ன" என்றமையின், திணை மயக்கமாகக் கோடல் பொருத்தமாகாது.

"ஞெமையோங் குயர்வரை யிமயத் துச்சி
வாஅ னிழிதரும் வயங்குவெள் ளருவிக்
கங்கையம் பேர்யாற்றுக் கரையிறந் திழிதரும்
சிறையடு கடும்புன லன்னவென்
நிறையடு காமம் நீந்து மாறே"

—369

இதில் இமயத் துச்சியினின்று வரும் கங்கைப் பேரியாற்றின் கரை கடந்து சிறையுடைத்துச் செல்லும் வெள்ளத்தை, நெய்தல் நிலத்துத் தலைவி தன் நிறையடு காமநோய்க்கு உவமை கூறினள்.

"கிழவி சொல்லி னவளறி கிளவி
தோழிக் காயி னிலம்பெயர்ந் துரையாது"

என்பதைப் பேராசிரியர் உள்ளுறை யுவமைக்கு ஆவதோரிலக்கணம்கூறியதாகக் கொண்டு "இதனது பயம்: தலைமகள், இந் நிலத்துள்ளனவெல்லாம் அறியுந்துணைப் பயிற்சியிலளெனவும், அவளாயத்தாராயின் இந் நிலத்துள்ளன அறியச் சிதைந்ததின்றெனவுங் கூறியவாறு" என விளக்கவுரை கூறினர். இளம்பூரணர் இச் சூத்திரப் பகுதி ஏனை யுவமம் கூறியதாகக் கொண்டனர். இருவருரையானும் தலைவியும் தோழியும் பயிற்சியின்மை காரணமாக வேற்று நிலத்துக் கருப்பொருள் எடுத்துரைக்கப் பெறார் என்பது பெறப்படும். உள்ளுறையுவமை, ஏனையுவமை யென்னும் இரண்டனுள் ஒன்றற்குப் பிற நிலப்பொருள் எடுத்துரைக்கப் பெறாரெனின், அவ் விதி மற்றேருருவமைக்கும் எய்துதல் பொருத்தமாகும்; பயிற்சியின்மை காரணமாதலின். எனவே, மேற்காட்டிய பாடல்களில் நிலம் பெயர்ந்துவமை கூறியிருப்பதை வழுவமைதியாகக் கோடல் பொருத்தமாகும்.

## viii. சில ஆராய்ச்சிக் குறிப்புக்கள்

319-ம் பாடலில் நள்ளிரவின் நிலையைக் கூறுமிடத்து

" ஓதமும் ஒலியோ வின்றே யூதையும்
தாதுளர் கானல் தெளவென் றன்றே
.......................................................
அணங்குகால் கிளரும்"

என நள்ளிரவில் கடல் ஒலியடங்கு மென்றும், பேய்கள் வெளிப்பட்டுலாவும் என்றும் கூறப்பட்டுள்ளன. பேய் உலாவுதல் "கழுதுகால் கிளரவூர் மடிந்தன்றே" என 255-ம் பாடலிலும் கூறப்பட்டுள்ளது.

" காமுற்ற கையறவோ டெல்லே இராப்பகல்
நீமுற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி யேங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் தாள்நயந்த
யாமுற்ற துற்றாயோ வாழி கனைகடலே"

—2—1—2

என்ற திருவாய்மொழியிலும்,

" பூங்கணை வேளைப் பொடியாய்
விழவிழித் தோன்புலியூர்
ஓங்கணை மேவிப் புரண்டு
விழுந்தெழூந் தோலமிட்டுத்
தீங்கனைந் தோரல்லுந் தேறாய்
கலங்கிச் செறிகடலே
யாங்கனைந் தார்நின்னை யும்முள
ரோசென் றகன்றவரே"

179

என்ற திருக்கோவையாரிலும்,

" ஆழி, துயிலா தோவென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து"

—சுயம்வரம், 108

என்ற நளவெண்பாவிலும் இரா முழுதும் கடல் ஒலிக்குந் தன்மையதென்பது காணப்படுகின்றது.

"ஊன்றின் றுவகையா லுள்ள வுயிர்புறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே"

—சுயம்வரம், 116

"தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம்"

—கலிதொடர், 96

என்ற நளவெண்பாவிலும்,

"பரவைதன் புலவி தீர்ப்பான்
கழுதுகண் படுக்கும் பானுள்
இரவினிற் றூது கொண்டோன்
இணையடி முடிமேல் வைப்பாம்"

—திருவிளையாடல்

என்ற திருவிளையாடற் புராணத்திலும் எல்லாவுயிர்ப் பொருள்களும் துயிலுதற்குரிய நள்ளிரவிற் பேயுந் துயிலும் தன்மைய தென்பது காணப்படுகின்றது. இவ்விரு கருத்துக்களையும் அறிஞர் ஆராய்ந்து துணிவார்களாக.

நச்சினார்க்கினியர் தொல் - அகம் - 20-ம் சூத்திர உரையில், உரிப்பொருட் டலைமக்கள் பெயர் வரிசையில், நெய்தலுக்குக் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம்புலம்பன் என்பவற்றை யுரைத்தனர். இவற்றுள் இந் நற்றிணை நெய்தற் பாடல்களிற் கொண்கன் என்பது உரிப்பொருட் டலைமகன் பெயராகப் பல விடங்களில் வந்திருப்பதோடு

"நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை
யினியறிந் திசினே கொண்க னாகுதல்"

—278

என்ற பகுதியில் கணவன் என்ற பொருளிலும் வந்திருத்தலின், அச்சொல் அவ்விரு பொருளுக்கும் உரிமையுடைத்தென்று கொள்ளுதல் பொருத்தமாகும்.

நெய்தலும் நீர்வள முடையது ; மருதமும் நீர்வளமுடையது ; அதனால் அவ்விரண்டும் மீன் மிகவுடையன ; எனினும் இந் நற்றிணை நெய்தற் பாக்களில் இறா, சுறா, அயிரை முத

லிய பெயர்களும், மருதத்தில் வாளை, வரால், கெளிறு முத லிய பெயர்களும் மிகுதியாகக் காணப்படுதலின், அவை அவை அவ்வந்நிலத்திற்கு இயல்பாக உரியவை எனக் கோடல் பொருத்தமாகும்.

நெய்தல் நிலத்தில்,

"விழவுக்களங் கமழு முரவுநீர்ச் சேர்ப்ப"

—19

எனவும்,

"ஊரே,
ஒலிவருஞ் சும்மையொடு மலிதொகு பீண்டிக்
கலிகெழு மறுகின் விழவய ரும்மே"

—348

எனவும்,

"இழையணி யல்குல் விழவாடு மகளிர்"

—138

எனவும் வருதலால் விழாக் கொண்டாடுதல் உண்டென்பது அறியப்படுவதன்றி, அவ் விழா எதை நோக்கி, எக்காலத்து, எவ்வாறு கொண்டாடப்படுவது என அறிதற்குரிய குறிப் புக்கள் ஒன்றும் காணப்படவில்லை. நச்சினார்க்கினியர் தொல் - அகம் - 5-ம் சூத்திர உரையில் "நுளையர்க்கு வலை வளந் தப்பின் அம் மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக் கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படும் என்றார். ஆனால் இந் நற்றிணை நெய்தற்பாக் களில் இத்தகைய விழா ஒன்றுங் காணப்படவில்லை. இனித் தெய்வத்தைப் பற்றிப்

"பெருங்கடற் பரப்பி னமர்ந்துறை யணங்கோ"

—155

"தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பை"

—303

" அணங்கல் ஓம்புமதி வாழிய நீயெனக்
கணங்கெழு கடவுட் குயர்பலி தூஉய்ப்
பரவினம் வருகஞ் சென்மோ தோழி"
—358

என்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன. "அணங்கு கால் கிளரும்" (319) "உருகெழு தெய்வமும் கரந்துறை யின்று" (398) என்பவை பேயைக் குறிப்பனவாகக் காணப் படுகின்றன. எனவே மேற் காட்டப்பட்ட மூன்று குறிப்புக் களில் வருணனைச் சிறப்பாகக் குறிப்பது ஒன்றுமில்லை என் பது அறியலாகும். 155-ல் வந்துள்ள "பெருங்கடற் பரப்பி னமர்ந்துறையணங்கோ" என்பதைக் கொள்ளலாமெனின், அச் செய்யுளில் தலைவன் உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவியை அங்ஙனங் கூறுகின்றானாதலின், ஆண்டு அணங்கு என்பதை, வருணன் என ஆண்பாற் சொல்லாற் கூறப்படும் தெய்வமாகக் கோடல் பொருந்தமாகாது. அகநானூறு 307-ம் செய்யுளில்,

"கடல் கெழு செல்வி கரைநின் றாங்கு" என்று கூறப் பட்டுள்ளதுபோல் பெண்பாற் றெய்வத்தைக் குறித்ததாகக் கோடலே பொருத்தமாகும். நெய்தற் றிணைக்குரிய 102 பாடல்களில் அத்திணைக்குரிய தெய்வத்தைச் சிறப்பாக உணரும்படி ஓரிடத்தும் கூறப்படாமை வியப்பைத் தரு கின்றது.

"ஈண்டு பெருந் தெய்வத் தியாண்டுபல கழிந்தென"
—315

என்ற பகுதியால் அக் காலத்தவர், காலம் தெய்வத் தன்மை யுடையதாகக் கருதினர் என்பது புலனாகின்றது. இனிக் காலம் கடவுளாணைப்படி நிகழ்கின்றது என்று கொண்டு, "ஈண்டு பெருந் தெய்வத் தியாண்டு பல கழிந்தென" என் பதற்கு இந் நிலத்துப் பெருந் தெய்வமாகிய வருணனாலே யாண்டுகள் பல கழிந்தனவாக, எனப் பொருள் கொள்ளின் வருணன் என்னும் தெய்வம் குறிப்பிடப்பட்டதாகும்.

சுரம் என்னுஞ் சொல் காடு, வழி என்னும் பொருள் களிலும் வருவதாயினும் பெரும்பாலும் பாலைநிலம் என்னும் பொருளிலேயே வருவதாகும். இந் நற்றிணையில் "கழிச்

சுர நிவக்கு மிருஞ்சிறை யிவுளி" (63) எனவும், "திமின் மேற் கொண்டு திரைச்சுர நீந்தி" (111) எனவும் நீர்ப் பரப்பு, சுரமாகக் கூறப்பட்டுள்ளது. பாலை நிலம் கடத்தற் கரிதாதல் போல், நெய்தலிலுள்ள நீர்ப்பரப்பும் கடத்தற் கரிதாதல் நோக்கி அதனைச் சுரமாகக் கூறினர் போலும்.

"செம்பே ரிரணை யலவற் பார்க்கும்" (123) என்பதில் இரட்டை என்னும் பொருளில் இரணை என்னுஞ் சொல் வந்துள்ளது. இரட்டை, இரணை என்னு மிரண்டனுள் ஒன்று மற்றொன்றாகத் திரிந்ததோ, அன்றி இவ் விரண்டும் தனித்தனியே இரண்டு என்னுஞ் சொல்லினின்றும் திரிந்து வந்தனவோ என்பது ஆராய்தற்குரியதாகும்.

## ix. செய்யுள் நயம்

சங்கச் செய்யுட்கள் கருதிய பொருளைத் தெளிவுற விளக்கி, இன்னுரையும் குறிப்புப்பொருளுமுடையவாய், வெற்றெனத் தொடுத்தலின்றி விளங்குதலை அதன்கட் பயில்வோர் யாவரும் உணர்வர். அவ்வகையில் நற்றிணையும் தன் பெயருக் கேற்றவாறு சிறந்த செய்யுட்களையுடையதாய் விளங்குகின்றது. அகப்பொருட் பாடல்களில் இயல்பாகப் பயின்று வருவனவாகிய உள்ளுறைப் பொருள் இறைச்சிப் பொருள்கள் இந் நற்றிணைச் செய்யுட்களில் மிகுதியாகப் பயின்று வருகின்றன. அவற்றை இந் நூலுக்குச் சிறந்த உரையெழுதிய அ. நாராயணசாமி ஐயரவர்கள் ஆங்காங்குப் புலப்படுத்தியுள்ளார்கள். உள்ளுறையு மிறைச்சியுமன்றி வேறு வகையிலும் குறிப்புப் பொருள்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஒரு செய்யுள் வருமாறு:

"அறிதலு மறிதியோ பாக பெருங்கட
லெறிதிரை கொழீஇய வெக்கர் வெறிகொள
வாடுவரி யலவ னோடுவயி னாற்றா
தசைஇயுள் ளொழிந்த வசைதீர் குறுமகட்
குயவினன் சென்றியா னுண்ணோ வுரைப்ப
மறுமொழி பெயர்த்த லாற்றா ணறுமலர்
ஞாழ லஞ்சினைத் தாழிணர் கொழுதி
முறிதிமிர்ந் துதிர்த்த கைய
ளறிவஞ ருறுவி யாய்மட நிலையே"

இச் செய்யுளில், தலைவியைப் பிரிந்து சென்று தன் கருமம் முடித்து மீண்டுவரும் தலைவன், தலைவியை விரைந்து சென்று காண்டல் விருப்புடையனாய், அதற்கேற்பத் தன் தேரை விரைவிற் செலுத்துமாறு பாகனுக்கு அறிவுறுத்துகின்றான். இதன்கண் "ஆடுவரியலவன்.........குறுமகள்" என்பதனால் தலைவி புதல்வற் பயந்து இல்லறத்துப் பெரிதுஞ் சென்ற உள்ளத்தளாய் முதிர்ந்த நிலையினளன்றி, அலவனுடன் ஓடி விளையாடும் இளம் பருவத்தினள் என்பதும், அதனாற் பிரிவிடைப் பெருந்துயருறு மியல்பினள் என்பதும், மிக்க அழகுடையள் என்பதும் உணர்த்தப்பட்டன. "அன்பு தொக நிற்றல்" என்ற மெய்ப்பாடும், அதற்குக் "களவுக் காலத்து விரிந்த அன்பெல்லாம் இல்லறத்தின்மேற் பெருகிய விருப்பினானே ஒருங்கு தொகநிற்றல்" என்ற பேராசிரியருரையும், இந் நற்றிணை 280-ம் பாடலில்,

"புலவா யென்றி தோழி புலவேன்...... ...
தொன்றுமுதிர் வேளிர் குன்றூ ரன்னவென்
நன்மனை நனிவிருந் தயருங்
கைதூ வின்மையின் எய்தா மாறே"

என்ற பகுதியில் விருந்தோம்புதல் ஒழிவின்மையின், பரத்தமையுடைய தலைவனோடு புலத்தலின்று எனத் தலைவி கூறுதலுங் காண்க. ஐங்குறுநூறு முதற் பத்துப் பாடல்களும் ஈண்டு நினைத்தற்குரியன. மற்றும் அலவனோடு ஓடவியலாது தளர்ந்தனள் என்றதனால் தலைவியின் மென்மைத் தன்மையும் புலப்படுத்தியவாறும். "உயவினன் சென்றியான் உண்ணே வுரைப்ப" என்பதனால் அத்தகைய இளமையும் அழகும் மென்மையு முடைய தலைவியைப் பிரிதலிற் றலைவனுக்குள்ள வருத்த மிகுதியும். அங்ஙனம் வருந்தியும் பிரியக் கருதினமையால் பிரிதற்குரிய கருமத்தின் இன்றியமையாமையும், செல்லுமிடத்து நீட்டித்தலின்றிக் குறித்த காலத்து வினை முடித்து மீண்டு வருவன் என்ற குறிப்பும் உணர்த்தப்பட்டன.

"வினைக்குஞ் செய்பொருட் கும்வெயில் வெஞ்சுரம்
நினைத்தும் நீங்குதல் ஆண்கடன்"

—சிந். 1400

என்ற சிந்தாமணிச் செய்யுட் பகுதியும் "தன் மனைவியை நினைந்து வருந்தியும் பின்னும் போர்த் தொழிற்கும் பொருட்கும் வெஞ்சுரத்தைப் போதல் ஆண்மக்கள் தொழில்" என்ற அதனுரையும் காண்க.

"மறுமொழி பெயர்த்தல் ஆற்றுள்...ஆய்மட நிலையே" என்பதனால் தலைவி மறுமொழி கூறுதற்கும் ஆற்றாத நிலையில் அறிவு மயங்கித் துயர் பெரிதுடையளாயினள் என்பதும், பூங்கொத்தும் இளந்தளிரும் பறித்துப் பிசைந் துதிர்த்தனள் என்றமையால் சொல்வதும் செய்வது மறியாது மயங்கினார் தன்மை இன்ன தென்பதும் உணர்த்தப்பட்டன. இவ்வாறுள்ள தலைவியின் நிலையை அழகிய மடப்பத்தோடு கூடிய நிலை என்றான் தலைவன்; அந்நிலை அவனுக்குக் காண்டற் கினிமை பயத்தலின்,

"கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்"

—குறள்

என்றாங்குத் தலைவன் பிரிவிற் றலைவியும் துன்பநிலை அவளது அன்பின் ஆழத்தை அவனுணர்தற் கேதுவாகலின் அந்நிலை அழகிய நிலையாயிற்று. தலைவன், தன்னை நினைந்து தலைவி வருந்தியிருக்கும் நிலையைக் காண விழைதல் உண்டென்பது

"நூனவின்ற பாகதேர் நொவ்விதாச் சென்றீக
தேனவின்ற கானத் தெழிஞெக்கித்—தானவின்ற
கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
நிற்பாள் நிலையுணர்கம் யாம்"

—ஐந்திணையைம்பது, 10

என்ற செய்யுளானு மறியப்படும். (நொவ்விதா - கடிதாக. கவுண்மிசைக் கை யூன்றி நிற்பாள் என்றதனால் துன்பத்தோடு நிற்பவள் என்பதறியப்படும்.)

"மாணநோற் றீண்டிவ ளிருந்த வாறெலாம்
காணநோற் றிலனவன் கமலக் கண்களால்"

என மிதிலைச் செல்வி அசோகவனத்தில் தன்னுருயிர் நாயகனை யெண்ணி யெண்ணி யேங்கியிருக்கும் நிலையை இரா

மன் காணப் பெற்றிலன், அவன் கமலக்கண் பெற்றிருந் தும் என் பயன் என்று அநுமன் கூற்ருககக் கம்பர் கூறுதல் காண்க.

இனி அழகுடையார் எந்நிலையினும் அழகுடையராகவே விளங்குவர் என்னுங் கொள்கைக் கேற்பத் தலைவி துன்ப நிலையினும் அழகுடையளாகவே விளங்கினள் என்பதுணர்த்த "ஆய்மட நிலை" எனப்பட்டதெனினுமாம்.

"செயிர்ப்பினு மழகு செய்யுந் திருமுகத் தணங்கைத் தீர்ந்து" எனக் கம்பர் கூறுதல் காண்க.

"அறிதலும் அறிதியோ பாக" என்பதனுல் இங்ஙன மிருந்த தலைவியின் நிலையும் அவட்கு வருத்தத்தோடு சென் றுரைத்த தலைவன் நிலையும் (பாகன் பெரும்பாலும் தலைவ னுடனிருப்பவனுதலின்) பாகன் அறிந்திருத்தல் கூடும் என் பதும், அங்ஙனமறிந்து வைத்தும் தலைவன் தலைவியை விரை விற் சென்றடையுமாறு, குதிரை இயல்பில் விரைவாகச் செல்வதாயினும் அதனை மேலும் தூண்டி விரையச் செலுத் தாமை தவறென்பதும், அங்ஙனம் செலுத்துமாறு தலைவன் குறிப்பாலுணர்த்துகின்ருனென்பதும் புலப்படுத்தப்பட் டன.

"துணைபரி துரக்குஞ் செலவினர்,
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே"
—முல்லைப் பாட்டு, **102—103**

என்ற பகுதியில் இயல்பில் விரைந்து செல்லுங் குதிரையை மேலுந் தூண்டிச் செலுத்துதல் கூறப்பட்டமை காண்க. மற் றும் "பெருங் கடல்.........வெறி கொள்" என்பது அந் நிலத்து இயற்கை நலனுணர நிற்றல் காண்க. இச் செய்யு ளில், பாகன் தலைவனுடைய ஏவலாளனுயினும் தலைவன் அவனுக்குத் "தேரை விரைவிற் செலுத்து" என ஆணை யிடாது அவன் குறிப்பானுணர்ந்து செய்யுமாறு நயம்படக் கூறியிருக்கு மழகு உணர்ந்து மகிழ்தற் குரியதாகும். இங் ஙனம் பொருள்நய மிக்க பாடல்கள் பல இந் நற்றிணை நூல கத்துள்ளன.

---

# குறிஞ்சி

[வித்துவான். வி. அ. அரங்கசாமி]

## தோற்றுவாய்

***தண்டமிழ் அன்பர்களே!*** நற்றிணை யென்னும் இந்நூல் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகும். மற்றும் ஐந்திணைகளைப்பற்றிக் கூறும் அகப்பொருள் நூல்களுள் இதுவுமொன்றாக அமைந்துள்ளது. அங்ஙனமாயின் ஐந்திணைகளைப்பற்றிக் கூறும் நூல்கள் பலவற்றுள்ளும் இந்நூற்கு மட்டும் திணையெனப் பெயர் அமைதல் பொருந்துமோவெனிற், சேற்றிற் றோன்றும் பூக்கள் பல இருப்பினும் தாமரை யொன்றே பங்கயமெனப் பெயர் பெற்றது போலவெனக் கொள்க. அற்றேல் திணையெனக் கூறின் அமையும், நற்றிணை யெனப் பெயர் பெறுதல் யாது கருதியெனிற், பல்லோர் பாடிய கோவை பலவற்றுள்ளும் நம் மணிவாசகர் மலர்ந்தருளிய கோவை யொன்றுமே திருக்கோவை யெனப் பெயர் பெற்றது போல வென்க.

இனி "நற்றிணை நல்ல குறுந்தொகை" என வரூஉஞ் செய்யுள்கொண்டு பலரும் தொகை நூல் பலவற்றுக்கும் பலபடப் பெருமை கூறுப. அங்ஙனமே கொள்ளின் அகப்பொருள் நூல்களுள் முதலிலமைந்தமையின் இந் நூலுஞ் சிறப்புற்றது. அவ்வாறாயின் இந் நூற்கு அடை கொடாது ஏனையவற்றிற்கு அடைபுணர்த்த கருத்தென்னை? அற்றன்று. ஒரு நூலிற் காணுங் கொள்கைக்கு அந் நூலுளே சான்று காண்டல் போல நற்றிணை யென்னு மிச்சொல்லுளே அகச்சான்றாக அமைந்த நல் என்பதே அடைமொழியாம். இனி நல் என்பது திணை யென்பதற்கு அடையாகி நற்றிணையென, நூற்குப் பெயராயிற்றாக அடை யாண்டாம்? அங்ஙனமாயின் அடை யில்லை யென்பார் கூற்றே அதன் சிறப்பினை உணர்த்தும். யாங்ஙனமெனின் ஏனைய நூல்கள் போல இந் நூற்கும் அடைகொடுப்பின் அவற்றோடிதனை ஒப்பித்ததாம். சிறப்பினை யுணர்த்தற்கே அடை புணர்க்கவில்லை யென்க.

## அகப்பொருள்

அகப்பொருளிற் சிறப்பாக உள்ளது களவாம். அக் களவு இன்பத்தினைத் தரவல்லது. அவ் வின்பத்திற்கு இன்பஞ் செய்யவல்லது ஊடலாம். இன்னும்

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே"

என்ற தொல்காப்பிய உரிப்பொருட் சூத்திரத்து, புணர்தலை முன்னும் ஊடலைப் பின்னுமாக அமைத்த முறையினைத் தழுவிக் களவொழுக்கம் நிகழுங் குறிஞ்சியை முதலினும், ஊடல் என்ற உரிப்பொருள் நிகழும் மருதத்தை ஈற்றினும் அமைத்து, இந் நூல் தொகுக்கப்பட்டுள்ளமை காண்க.

உலகம் உவக்கும் பெருமொழிகளுள் ஒன்று யிலங்கும் தமிழின் துறையாயுந் தகவோர்களே!

யானிவண் எடுத்துக்கொண்ட பகுதி குறிஞ்சி. அக் குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் புணர்தலும் புணர்தனிமித்தமுமாம். அப் புணர்தல் சிறந்ததென்பது "புணர்தல் பிரிதல்" என்ற சூத்திரத்துத் தொல்லோர், புணர்தலை முற் கூறிய முறையானே தெளிவுறும். அங்ஙனமாய காமப் புணர்ச்சியான களவே சிறந்தது. அது பொதுவாக ஐந் திணையினும் நிகழுமாயினும் குறிஞ்சிக்கே உரித்தென்பது பலவுரைகளாலும் வெளியாம். அக் களவு சிறப்புடைத்தென்பது,

"நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது
காதற் காமங் காமத்துச் சிறந்தது"

எனவும்,

"தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழாய் வந்திலர்
கொள்ளார் இக் குன்று பயன்"

எனவும் வருஞ் செய்யுட் பகுதியான் விளங்கும். இன்னும் அது வீடுபேறும் பயக்குந் தன்மைத்து. இதனை,

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்ற தொல்காப்பியர் கூற்றானும், "களவொழுக்க மென்னும் பெயர் பெற்று வீடுபேற்றின் பயத்ததாய் அன்பினானிகழ்ந்த காமப்பொருள் நுதலியது" எனக் கூறும் பேராசிரியர் உரையானும், களவொழுக்கம் ஒழுகிய ஒருவனை வஞ்சித்துச் சென்று நன்னெறிக்கண் நிறீஇயினமையின் களவிய லென்னுங் குறி பெற்றதென உரைக்கும் இறையனா ரகப்பொருளுரையானும் அறிக.

பெரியோர்களே!

இத்தன்மையாய களவொழுக்கினைத் தன்னகத்தே கொண்ட குறிஞ்சிக்கண், தலைவன் கூற்றாக இருபது செய்யுளும், தலைவி கூற்றாகப் பதினெட்டும், தோழி கூற்றாக எண்பதும், இரு துறைகளானியன்றன எட்டும் முத்துறைகளானமைந்தன இரண்டும், பரத்தை பகன்றதோர் தொடையுமாக நூற்றிருபத்தொன்பது செய்யுட்களுள. அவற்றுள் சிலவற்றைக் காண்பாம்.

இயற்கைப் புணர்ச்சி பெற்ற தலைவன் நலம்புனைந் துரைக்கும் வழிக் கூறுவான். 'இளம்பருவத்தாளும், எனக் கின்பத்தை யளித்தவளுமாய இவள் தந்தை வாழ்வானாக; இவள் தாய் பொறையன் தொண்டி நகர்போல் எல்லாவளனும் பெற்றுப் பொலிவாளாக' எனக் கூறும் பகுதி நோக்கற்பாற்று (8). தலைவன் பாங்கற் கூட்டம் வேட்பான் குறவரது பெதும்பைப் பெண்ணின் பேதுறு நோக்கால் மால் கொண்டமையைப் பாங்கற்குக் கூற, ஒரு பெண்ணால் இத் தன்மையனாதல் தகுதியுடைத்தன்று எனப் பாங்கன் கழறத் தலைவன் கூறுவான்; 'கொல்லிவரைக்கண்ணுள்ள பாவை, கால் கடுகிச்சென் றலைப்பினும், கடுமழை பொழியினும், உரும் பல உறுமினும், பெருநிலங் கிளரினும் தன்னழகிய வடிவங் கெடாதவாறுபோல இத் தலைவியும் என்னெஞ்சினின்றும் நீங்குபவளல்லள்,' என உரைக்கும் உறைப்பு, காதலின் ஆழத்தை உணர்த்துகின்றமை அறியற்பாலதாம்.

(201). இனித் தலைவன் இடையீடுபட்டு வாராதொழியத் தலைவி காம மிக்குக் கிள்ளையை நோக்கிக் கூறுவாள். 'பசிய கிள்ளாய்! அஞ்சல். உணவு கொள்ளும் நின் குறையை முடித்தபின்பு நின் கிளையிடத்துச் செல்லின், ஆண்டுள்ள அம் மலை கிழவோர்க்கு, குறவர் மடமகள் ஏனல் காவலா யினள் என்ற என் குறையை உரைக்குமாறு கைகளைக் குவித்துத் தொழுது இரந்து கூறுகின்றேன், தலைவி, தன் புனத்திலுள்ள கதிர்களைக் கிளி கொள்ளலின், தன் குரல் கேட்ட ஞான்று அஞ்சுமே என எண்ணி முதலில் அஞ்சல் எனக் கூறினள். தன் குறையைத் தலைவனிடம் அறிவிக்க வேட்பாள் நின்குறை முடித்த பின்றையெனவும், நின் கிளை சேறியாயின் எனவும் உரைத்தமை அறியற்பாலதாம். அன்றி உலகவழக்கும் அதுவாம். இங்ஙனம் கூறியும் கிள்ளை, தலைவனிடம் கூறுமோ, கூறாதொழியுமோ எனக் கருதித் தன்னைத் தாழ்த்தியும் அதனை உயர்த்தியுங் கூறுவாள், "செய்தல் வேண்டுமால் கைதொழுதிரப்பல்" என நயமாகத் தன் குறையை உரைக்கும் பகுதியாக அமைந்துள்ள செய்யுள் கற்றோர் மகிழும் பான்மையதாம் (102). மற்றும் பெற்றோர் வரைவு மறுத்துழித் தலைவன், தலைவியைத் தோழியாற் பெற்று உடன்கொண்டு சென்று தன்னூரிலே மணம் புரிவன். இங்ஙனம் வரைவு நிகழ்ந்தபின் தோழி, தலைவன் மனைசென்று தலைவியின் புதிய அழகினைக் கண்ணுற்று,

> "தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு
> நோயும் இன்பமும் ஆகின்று மாதோ."

எனப் பகரும் பகுதியின் பண்பு நோக்கி மகிழற்பாலதாம். இதன்கண் அமைந்துள்ள முறையும் நோக்கத் தகுந்தது. மற்றும் தீயினைக் களவிற்கும், காற்றினைக் கற்பிற்குமாகக் கூறிய முறை சிறப்புடையதே. அளவான தீ இன்பத்தையும், அளவில் தீ துன்பத்தையுங் கொடுக்குந் தன்மைத்து. அதுபோலக் களவு பலருமறியா நிலையில் இன்பத்தையும், பலருமறிந்த நிலையில் துன்பத்தையுங் கொடுக்கும். வளியால் பெரும்பான்மை துன்பமின்றியும் சிறுபான்மை கடுவளியாற் றுன்பமுறுதலும்போலப் பெரும்பான்மை கற்பினால் இன்பமும், சிறுபான்மை ஊடல் நிகழ்ந்துழித் துன்பமும் நிகழும். இன்னும் மக்கள் வளியின்றி வாழ்தல் இயலாவாறு போல, கற்பின்றிக் களவமையாது. இங்ஙனம் பலபட

வமைந்துள்ள பாக்களின் பண்புகளை உய்த்துணர்ந்து கொண்மின் (294). இனி இவ்வாறமைந்த உவமையின் சிறப்புக்களைத் தனியே காண்பாம்.

## உவமை

தொல்காப்பியர் உவமத்திற்கெனத் தனி இயல் வகுத்துச் சென்றமையை நோக்கின் அதன் சிறப்பு விளங்கும். பிற்காலத்தாரால் கூறப்படும் அணிகள் யாவும் இதனினின்றும் விரிந்தனவே. சங்க இலக்கியங்களிற் காணப்படுவன யாவும் உவமையாகவே உள்ளன. இதனாலும் அக்காலத்து உவமையே உலவி வந்ததென்பது தெளிவாம்.

புதல்வனைப் பெற்ற மடந்தை யொருத்தி, தன் முலைக் காம்பைத் தன் கையாற் பிடித்துக் குழந்தையின் வாயில் வைப்ப அக் குழந்தை பாலைப் பருகுவதுபோலக், காந்தட் பூக்களின் குலை இடையே தோன்றிய செழித்த மடலையுடைய வாழைப்பூவின் மடற்கண் இருந்து அருவிபோலப் பெருகிவரும் இனிய நீரைச் செம்முக மந்தி உண்ணாநிற்கும் (355).

மருத்துவன் கொடிய நோயுற்றார்க்கு அவர் வேட்ட பொருளைக் கொடாது நோயினளவினையும், அதன் முதலையும், அது தீரும் வகையினையுமறிந்து அதற்கேற்ற மருந்தினையாய்ந்தறிந்து கொடுத்தல்போல என் (தலைவி) தந்தையும் மலைநாடன் நட்பாலுண்டாம் பிரிவுண்மையையறிவான்போல, பிரிவினால் உண்டாகும் தோளின் பழியை மறைப்பான்வேண்டி, யான் நீக்கினும் நீங்காமலும் கழலுந் தன்மை யெய்தினும் தன்னெல்லை கடவாமலுமிருக்கும்படியான தோள்வளையை யளித்தனன்போலும் (136).

குவளைமலர் கொய்பவர் நீருள்ளிருப்பினும் நீர்வேட்கையுற்று விரும்புவதுபோல, தலைவியை நாடோறுங் காதலன் முயங்கிவருவழியும், அவள் வளைகள் கழலாநிற்பதால் மீண்டும் புணர்ச்சியை விரும்புகின்றாள் (332).

பல நன்மைகளும் பொருந்தி யழகமைந்த வேள்பாரியின் குன்றத்தைப்போல, சிறந்த அழகமையப்பெற்ற தலைவி அரிய காவலுட்பட்டாள். காவலுட்படுதற்குப் பிறரினின்

றும் வேறுபட்ட சிறப்பே காரணமாம். இதனால் பறம்பு மலையை மூவேந்தருங்கூடி முற்றுகையிட்டும் பயனுறுவாறு போல இக்காவலும் பயன்படாது என்பது பெறப்பட்டது (253).

அசுணமென்னும் விலங்கைக் கொல்பவர் முதலில் இன்னோசை செய்து இன்பத்தை ஊட்டி, உடன் வல்லோசையைத் தந்து துன்பத்தைக் கொடுத்தல்போல, நங் காதலனும் முதலிற் களவிற் புணர்ந்து இன்பத்தைக் கொடுத்து, அதனையே சீரிதென்றெண்ணி வரையாது வந்தொழுகுவதால் துன்பத்தைக் கொடுத்தனர். இதில் ஓசை யொன்றே இன்பம் துன்பம் இரண்டினையும் அளித்தல் போல, களவொழுக்க மொன்றே இன்ப துன்பங்களை யளித்தமை அறியற்பாற்று (304).

இருள் புலர் காலையில் கிழக்கிற் றோன்றும் வெள்ளி மறுநாளும் அவ்விடத்தை யடைதல்போல நங் காதலியும் அத்தன்மையுடையள். ஞாயிறு வெள்ளியை இவண் வாராதே என்பபோற் றோன்றி மறைப்பினும் அவ்வெள்ளி மறுநாளும் அவண் வருதல்போல, தமர் வரைவு மறுத்துத் தலைமகளை இல்வயிற் செறித்துத் தடுப்பினும், அவள் தன்னிடம் வருவள் என்பது தோன்றி நின்றமை காண்க. இன்னணம் தலைவன் நினைப்பதற் கேதுவாய்த் தலைமையுற்று நிற்பது காதலாதலின், அதன் தன்மையையுஞ் சிறிது நோக்குவாம்.

## காதற்றன்மை

மலையில் மிளகுகொடி படர்ந்த ஒரு தனியிடத்துக் கடுவனும் மந்தியும் புணர்ச்சியிற் கலந்தன. பெண்குரங்கு புணர்ச்சி வேறுபாட்டாற் றனக்குண்டாய குறியைச் சுற்றம் அறியுமே என அஞ்சியது. உடன் அம் மந்தி, பாயா வேங்கையின் தாழ்ந்த கிளைமீது சென்று, ஆழமாய சுனைநீரை ஆடியாகக்கொண்டு, தலைகவிழ்ந்து நோக்கித் தனக்குப் புணர்ச்சி வேறுபாட்டாற் குலைந்த தன் மயிரைச் சுற்றம் அறியாவாறு திருத்தாநிற்கும் எனக் கூறப்படுகிறது. அம் மலையிடத்து விலங்குகளின் காதல் இத்தன்மையதாயின், மக்களின் காதற் றன்மையை எடுத்துரைக்க வேண்டுமோ?

அன்றித் தலைவி, தன் தாய், தன்னை இல்வயிற் செறித்துக் காவலோம்பலின் அவளை, "நிரைய நெஞ்சத்தன்னை"

எனக் கூறும் தன்மையால் தலைவி கொண்டுள்ள காதல் நிலை விளங்கித் தோன்றுகிறது (236). இன்னுந் தன்னொடு உண்டுறங்கி உடனுறையும் தன்மையாள் எனவும், "ஒன்றித் தோன்றுந் தோழி" எனவும், "ஒன்றிய தோழி" யெனவும், "ஈருயிர்ப் பிணவின் ஓருயிர்" எனவும் கூறப்படுந்தோழியை, தலைவி, தான் காதலித்த தலைவனுக்கு, தனக்குற்ற பசலையை உரைத்த லொன்றையாவது, தான் படுந் துன்பத்தை அன்னைக்கு அறிவித்துத் தன் நோய் தணியும் வழியிதுவென உணர்த்த லொன்றையாவது செய்யாமையின், கொடியை! தோழி! யெனக் கூறும் பகுதி காதலின் சிறப்பை அறிவிக்கின்றது. மற்றும பெண்களுக்கு உயிரினுஞ் சிறந்ததாக உள்ளது நாண் என்பதே. அங்ஙன மிருக்க, தன்னை வினவிய அன்னைக்குத் தலைவி அந் நாணினையும் மறந்து தனக்குற்ற நிகழ்ச்சிகளைக் கூறத் தொடங்குமாயின் காதல் நிலை யாதாம்? காமத்துச் சிறந்ததாய காதற்காமம் கற்பு நெறியைக் கொடுக்கவல்லது. அக் கற்பு நாணினுஞ் சிறந்ததாகும். இதனையே, "நாணினுஞ் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" என ஆசிரியர் கூறினார். இவ்வாறுற்ற கற்பு நெறியைக் கருதித் தலைவி தன்னிலையை உரைக்க எழுந்தனளென்னில் அவள் நிலையினைக் கருதவல்லார் எவரே?

மற்று, ஒருநாள் ஒருவன் நாம் தினைப்புனக் காவல் செய்யுமிடத்து வந்தனன். அவன் கண்ணி சூடி கழலணிந்து மாலை வேய்ந்து வந்தமையின் தலைமகன்போற் காணப்பட்டான். இங்ஙனம் வந்த அம் மகன் குளிர்ச்சி யுறும்படி முதுகை யணைத்துப் புல்லினன். அதுமுதற்கொண்டு அதனை யுட்கொண்ட நெஞ்சத்தோடு யானுற்ற நோய் எனது மேனி வாடவும், நுதலொளி கெடவுமாயிராநின்றது எனத் தோழி, மெய்யும் பொய்யுங் கூறி வழிபடுதல் புணர்ச்சி யுண்மை யறிதற்கேயாம். தலைமகன் புனத்து வந்தமை மெய்யும், தன் முதுகைப் புல்லினன் என்பது பொய்யுமாம். தோழி இங்ஙனம் பொய்மை கூறி வழிபடுதலாய அறக்கழிவுடையனவற்றைக் கூறல் தக்கதோவெனில், அவை பொருட் பயம் பயக்குமெனின் ஏற்புடைத்தாம். இதனை, "அறக் கழிவுடையன பொருட் பயம் படவரின், வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப" என்ற தொல்காப்பியச் சூத்திரமும் வலியுறுத்திச் செல்லாநிற்கும். அற்றேல் பொருட்

பயம் யாதெனின், தலைவி புணர்ச்சி நிகழ்ந்தமையைத் தோழிக்கு அறிவியாது நிற்ப, தலைவன் தோழியிடம் குறை நேருங்கால், தோழி அவள் குறையுணர்ந்த பின்றை அவன் குறையை முடிக்க இயலுமாதலின் புணர்ச்சி யுண்மையறிதலாய பொருட்பயம் இதனால் பெறப்பட்டதென்க. இங்ஙனம் ஆராயும் தோழி, தலைவன் வருகின்றமையை விரிச்சியாலறிந்து தலைவிக்குக் கூறும் பகுதியை இனி நோக்குவாம்.

## விரிச்சி பெறுதல்

விரிச்சி=விரிவை (ஆக்கத்தை) யுணர்த்துவது. பண்டை நாளிலே ஒரு செயலை மேற்கொள்ளுங்கால் விரிச்சி பெற்றுச் செல்லும் வழக்குண்மை நூல்களாற் றெளிவுறும். இக்காலத்தும் அவ்வழக்கு வழங்கி வருகின்றது. அங்ஙனம் விரிச்சி பெறுதல் எற்றுக்கெனின் இன்ன தொன்று வினைவாய்க்கு மென்பதனை யறிதற்கேயாம். அதனால் ஆக்கத்தைப் பெறுகின்றனர். அதுபோல் ஈண்டும் விரிச்சியால் வினையறிந்து ஆக்கம் பெறுதலைக் காண்பாம்.

ஒரு நாள் ஒரு பன்றி தினைக் கதிர்களை மேயும் பொருட்டுத் தினைப்புனம் நோக்கி வந்துகொண்டிருந்தது. அக்காலத்து அவண் வாழுங் கானவர் புனத்திற்கு வரும் விலங்குகள் சாம்படியாக, அவை வரும் வழியிலே பொறிகளை யமைத்து வைப்பர். அங்ஙனமாக இப் பன்றி அதனை யறியாது பொறி வைக்கப்பட்டிருக்கும் புழை வழியே சென்று புகுந்தது. அவ்வமயம் பல்லி யொன்று இடைவிடாது படபடவென் றடித்தது. அதனைக் கேட்ட பன்றி ஆண்டுச் செல்லின் ஊறுபாடுறுமென் றஞ்சி, மெல்ல மெல்லப் பின்னே சென்று, மீண்டுந் தனது இருப்பிடமாய கன்முழையினுள் அடங்கியது. இதன்கண் பன்றி விரிச்சி பெற்று ஆக்கமெய்தினமை காண்க.

இன்னும் அயல்வீட்டு மாதொருத்தி வேறொருத்தியிடம் உரையாடிக்கொண்டிருக்குங்கால் அவன் இன்னே வருகுவன் எனக் கூறினள். அதனைத் தோழி நல் விரிச்சியாகப் பெற்று நந் தலைவனும் இன்னே வருவான் : ஆதலின் நீ வருந்தற்க வெனக் கூறுவதோடு அங்ஙனம் கூறிய அம் மாது அமுத முண்பாளாக, என்று தலைவிக்கு உரைத்து ஆற்றுவிக்கும் பகுதி அறியற்பாற்று (65).

இவண் கூறிய இவ்விரு பகுதிகளும் ஒரு தன்மைத் தன்று. அவற்றுள் முன்னது இயற்கையாக விரிச்சி பெறுதலும், பின்னது நிகழ்ந்த வொன்றை விரிச்சியாகக் கோடலும் ஆகக் காணப்படுதல் நோக்கத்தக்கது. இங்ஙனமமைந்துள தன்மையை யறிந்த நச்சினார்க்கினியர், "படையியங்கரவம்" என்ற சூத்திரத்துப் பாக்கத்து விரிச்சி யென்பதற்கு, நிரைகோடற்கு எழுந்தோர் போந்துவிட்ட பாக்கத்துக் கங்குலில் நல்வாய்ப்புட் கேட்டலும், நிரை மீட்டற்கெழுந்தோர் இடைப் புலத்துப் புறம் போந்தோர் கூறியவற்றை வாய்ப்புள்ளாகக் கேட்டலும் என நிரைகோடற்கும் மீட்டற்குமேற்ப உரைக்கும் உரை, அறிந்து மகிழற்பாலதாம். இத்தன்மைத்தாக விரிச்சிபெற்றுத் தோழி தலைவிக்குக் கூறத் தலைவன் வரவு நிகழ்ந்து பலகாலும் புணர்ந்து செல்வானாயினன். இங்ஙனம் நிகழுங்கால் தோழி, தலைவன் வரைவு கொள்வான் கருதி, உள்ளுறுத்துக் கூறும் பகுதியாக வந்துள செய்யுட்கள் மிக வனப்பு வாய்ந்துள. அவற்றுள் சிலவற்றை இனிக் காண்பாம்.

## உள்ளுறை

தலைவன் களவு மேற்கொண்டு பலகாலும் வந்துசெல்ல, அதனை நீக்கி வரைவினைக் கொள்ளக் கருதி, தோழி தலைவனை நோக்கி, கொழுத்த சுளையையுடைய பலாவினுற் பயன் மிக்க மலையின்கண் மிகுந்த காய்களுண்மையின் வளைந்த கிளையில் ஒரு கொக்கு வந்து தங்கியது. பின்னர் அது தான் கொணர்ந்த மீனைக் குடைந்து தின்ன அதனாலுண்டாகும் நாற்றம் தாங்கலாற்றாது மந்தி தும்மும் நாட, என விளித்து, தலைவியின் கண்கள் நீரைச் சொரிகின்றன வெனக் கூறினள். இதன்கண், உட்பொருள், வரைவு கடாதற் பகுதியாக அமைந்துள்ளது; அஃதாவது, பலாமரம், தினைப்புனமாகவும்; கொக்கு தலைவனாகவும், மீன் தலைவியாகவும், குடைதல் இன்பந்துய்த்தலாகவும், நாற்றம் அலராகவும், மந்தி அன்னையாகவுங் கொண்டு, மரத்தின்மீது கொக்கு இருந்து மீனைத் தின்னுதலாகிய நாற்றத்தைத் தாங்கமாட்டாது, மந்தி தும்முதல்போலத் தினைப்புனத்து நீ வந்து இவளைக் கலந்து செல்லுதலால் உண்டாகிய அலரைத் தாங்கமாட்டாது, அன்னை சினந்து பலகாலும் நோக்காநிற்

கும் என்பதாம். இதனால் தலைவன் அறிந்துகொள்வது வரைந்துகொள்ளவேண்டு மென்றதேயாம். இதன்கண், "மீன் குடை நாற்றம் தாங்கல் செல்லாது" என்ற விடத்துக் குடைதல் என்ற சொல்லாட்சி கருதத்தக்க தொன்றும். கொக்கு மீனை ஓரிடத்தே பல முறையும் கொத்தித் தின்னுதலின் குடைவு உண்டாக ஆண்டுத் திளைத்து உண்டலின் நாற்றந் தோன்றினமைபோலத் தலைவன் தலைவியை ஓரிடத்தே பலகாலுங் கூடித் திளைத்தமையின் அலர் உண்டானமை காண்க. இங்ஙனம் தோழி உட்பொருளமைத்து உரைத்தலோடு, சுவைபயக்குஞ் செய்திகளாகப் பகர்வன கேள்விக்கு இன்பம் பயப்பனவாகவும் காண்டற்குக் களி செய்வனவாகவும் உள்ளன (326).

## சுவைப் பகுதி

தோழி தலைவனை நோக்கிக் கூறுகின்றாள். மலையின்கண்ணுள்ள வேங்கைமரத்தின் கீழே வளைந்த கொம்பினையுடைய ஆமான், தன் கன்றுகளோடு தங்கியுறங்கின. அவ்வாறிருந்த தலைக் கண்ணுற்ற பஞ்சுபோன்ற மெல்லிய மயிரையுடைய மந்தி, தான் இனிச் செயுந் தொழிலுக்கேற்ப, முதற்கண் கல்லென்றொலிக்குந் தன் சுற்றம் ஒலியாவாறு கையால் செய்கை செய்தடக்கியது. பின்னர் அம் மந்தி அருகிலே சென்று ஆமானின்பால் சுரந்த மடியை அழுத்திப் பற்றியீர்த்து, இனிய பாலைக் கறந்து, தன் தொழிலையுங் கல்லாத, தனது குட்டியின் கைந்நிறையப் பிழிந்து உண்பிக்கும். இங்ஙனமாய நிகழ்ச்சியைக் காண்போரும் கேட்போரும் நகையொடு வியப்புமடைதலியல்பே (57).

மற்றும் தோழி தலைமகற்குத் தலைமகள் மடமை கூறுகின்றாள். ஒருநாள் தலைமகள் தன் வீட்டு முன்றிலின் கண்ணேயுள்ள வேங்கைமரத்தின்கீழ், பால்கொண்ட வள்ளத்தோடு நின்றுகொண்டிருந்தாள். அதுபோழ்து மந்தியின் குட்டியொன்று, அவளைக் கண்டு, அவளிடத்து நேராகச் செல்லாது கவர்வான் கருதி ஆண்டுள்ள வேங்கைமீது ஏறித் தாழ்ந்த கிளை வழியாகத் தலைவி யறியாவாறு சென்றது. சென்று அவள் கையிலிருந்த பாலைக் கலத்தொடு கவர்ந்தமையின் தலைமகள் கண்கள் நீர்நிரம்பிய நீலமலர்களை யொத்தன. கைகளால் வயிற்றை யலைத்தலின் விரல்கள் காந்த

ளின் மலரும் பருவ முகைகளைப் போன்றன. இச்செயலினைக் கண்ணுற்ற ஒவ்வொருவரும் நகையும், இரக்கமும் அடைவர் என்பது தெளிவாம் (379). இங்ஙனம் கூற்றிற்குரியோர் கூறுவனவாகப் புலவர்கள் அமைத்துள்ள சொன்னயங் களுள் சிலவற்றை நோக்குவாம்.

## சொன்னயம்

புலியுடனே போர்செய்து புண்மிக்க யானையின் கோடு களை விரும்பிய அன்பில் கானவர் : இன்னலுற்று வரும் அக் களிற்றிற்கே இடுக்கணிழைக்க விரும்பினமையின் அன்பில் கானவர் என்றார் (65). நந் தலைவனுக்கு நாம் பலவாறாகக் காதலுண்டாக்கி யிருந்தும் அவனாலே காதலிக்கப்படுந் தன்மையுடையே மல்லாதிருத்தல் யாது காரணமோ,சென்று வினவுகம் எனத் தோழி தலைவியிடம் கூறுவதாகிய கருத் தைக் " காதல் செய்தலுங் காதலமன்மை யெவனோ" எனப் புலவர் கூறியுள்ளார். தலைவனால் காதலிக்கப்படுந்தன்மை நம்மிடமின்மை நங்குறையன்றித் தலைவர் குறையன்று எனக் கூறுவதை யறிவிப்பான்வேண்டிப் புலவர் 'காதலமன்மை' என்ற சொல்லை அமைத்துள்ளார் (268). இன்னும், கொல்லி மலைக்கண்ணுள்ள மயிலின் தோகைபோன்ற கூந்தலையுடைய நந் தலைவி நம் பக்கத்து அன்புடையள் எனத் தலைவன் கூறு வதனைப் புலவர் "ஒலிமென் கூந்தல் நம்வயினோனே" எனக் கூறுகின்றார். இதன்கண் அவள் மயிர் நம் கையிலுள்ளது என்ற மற்றொரு பொருளுந் தோன்றி நின்றமை காண்க (265). இனி இங்ஙனமமைந்த சிறந்த செய்யுட்பகுதியைப் பகர்வாம்.

## சிறந்த செய்யுள்

" நயனும் நண்பும் நாணுநன் குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்
நும்மினு முடையேன், மன்னே "

—160.

ஒரு தலைமகன் ஒரு தலைமகளைக் கண்ணுற்ற ஞான்று உண்டாய தன்மைகளைக், காண்டற்கு முன்னிருந்த தன்மை களினின்றும் வேறுபடுத்திச் சிறப்பித்துத் தன் காதலின் மேம்பாட்டைப் பாங்கனுக்கு எடுத்துக் கூறும் பகுதி ஒவ்

வொருவரும் படித்து இன்புறற்பாலது. அத்தன்மையாய இச் செய்யுளை இவண் கூறுதல், இதுபோன்ற மற்றும் பல சங்கச் செய்யுட்களைப் பலருங் கற்று உளங்கொள மகிழ்வர் என்று கருதியேயாம். தலைவன் தலைவியை நினைந்து நெஞ்சழியாநிற்ப, அதனைக் கண்ட பாங்கன், நின்கண், நயன், நண்பு, நாண், பயன், பண்பு, பாடறிந்தொழுகல் இவை யமைந்திலவெனக் கழறினான். அதனைக்கேட்ட தலைவன் அதனை மறுத்துத் தன் கருத்தை முடிப்பான் வேண்டி அவை யாவும் தலைவியைக் கண்ணுற்றபின் வேறு வகையாக அமைந்தன வெனக் கூறுகின்றான். 1. யாருடனுங் கலந்து உறவு கொள்ளும் அன்பு, பின் இவளையின்றிப் பிறருறவு இன்பஞ் செய்யாமையின் அது நெகிழ்ந்து, இவள்பால் உறவு கொள்ளும் அன்பாக மாறியது. 2. சுற்றந்தழுவலும், பகைவரை வசித்தலுமாய நட்பினை இருவகை நட்பும் இவள் மாட்டன்றி யின்மையின் தலைவியின் நட்பு வென்றது. 3. பிறர் மாட்டு இரவாதவாறு பெற்ற நாணம், அவளிடத்து இரத்தற்குத் துணிதலால் தான் கோடற்குரிய நாணமின்மை யாய நாணமாக மாறியது. 4. இரப்பவர்க்குக் கரவாம லீயுங் கொடையாய பயன், பிறர்பாலன்றி இவள் விரும்பின் தன்னுயிரையும் கொடுக்குங் கொடையாய பயனாக ஆயிற்று. 5. தீச்செயலிற் செல்லாதவாறு நன்னெறிக்கண் நிறுத்தும் பண்பு, களவு தீதென்று அறிந்து வைத்தும் அவ்வழியிலே யொழுகும நன்மக்கட் பண்பின்மையாய பண்பாக மாறிற்று. 6. உலக வொழுக்கமறிந்து வைத்தும் அதனைக் கைவிட்டு இணைவிழைச்சுக் கொண்டு உழக்குந் தன்மையாய பாடறிந் தொழுகலாக ஆயிற்று. இவற்றுள் நாணமின்மையாய நாணம் எனவும், நன்மக்கட் பண்பின்மையாய பண்பு எனவும் கூறும் பகுதிகள் அறிந்து மகிழற்பாலன.

இன்னும் தலைவன் தலைவியிடத்துக் கொண்டுள்ள காதலின் உறுதியைப் பாங்கற்கு மற்றொரிடத்திற் கூறும் பகுதியை நோக்கின், காதலும் இன்ன தன்மையதோ என வியப்படையுமாறு அமைந்துளது; அஃதாவது,

“கால்பொரு திடிப்பினும் கதழுறை சிதறினும்
உருமுடன் றெறியினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினும் திருநல உருவின்

மாயா வியற்கைப் பாவையிற்
போதலொல் லாளென் னெஞ்சத் தானே"

என்பது. இதனைக் கருதின் எவ்வளவு ஆழ்ந்த உறுதி மனத்தின்கண் அமைந்துளது என்பது புலனும்.

இனி மேற்கூறிய "நயனும் நண்பும்" என்ற செய்யுளை உற்றுநோக்கின் அதன்கண் அமைந்துள்ள முறை வைப்பும் சிறப்புடையதாகக் காணப்படுகின்றது. அதனைச் சிறிது நோக்குவாம்;

"நயனும் நண்பும் நாணுநன குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்
நும்மினு முடையேன்"

இதன்கண் முதலாவதாக அமைந்துள்ளது, நயன் என்ற அன்பாம். மக்களின் உயிர்க்கும் உடலுக்குமுள்ள தொடர்பின் பயனாக உள்ளதும், இன்றியமையாததுமாக இருப்பது இவ்வன்பே. இவ்வன்பு இல்லெனின், ஒருவன் உயிர் வாழ்தல் இயலாதாம். அங்ஙனமின்றி உயிர் வாழ்தல் இயலும் என்பார் கூற்று, காக்கை வெளிதென்பார் கூற்றையொக்கும். இது கருதியே நந் தமிழ்ப்புலவர், அன்பினை முதலாவதாகக் கூறிச்சென்றனர். அங்ஙனமாயின், நயன் என்பது அன்பினைக் குறிக்குமோவென்னிற் குறிக்கும். "நயனில நட்டார்கட் செய்தலிற றீது" என்ற விடத்து நயனில - விருப்பமிலவாய என உரையெழுதிச் சென்றூர் பரிமேலழகர். விருப்பத்தை உண்டாக்குவது அன்பென்பது "அன்பீனும் ஆர்வமுடைமை" என்ற குறளால் தெளிவாம். இத்தன்மையாய நயன், நட்பினை நாட்டவல்லது என்பதனை யறிந்தே இரண்டாவதாக நட்பினைக் கூறினர். இதனையே வள்ளுவரும்,

"அன்பீனும் ஆர்வ முடைமை யதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு"

எனக் கூறினர். மற்றும் நட்பினைப்போன்ற காவல் வேறொன்றுமில்லை யென்றே கூறலாம். மேற்கூறிய விரண்டும் சிறுமகார்முதல் கழிகண்ணுக் கொள்ளும் கிழவர் ஈறாகவுள்ள அனைவருக்குமுளதாம். மூன்றாவதாக உள்ள

நாணமோ அவ்வாறன்று. ஆண்மை பிறக்கும் பதினன்கு முதல் பதினெட்டு ஆண்டுவரையிலுள்ள காலமே நாணம் உண்டாகும். இக்காலத்துள்ள உளநூற் கருத்தும் ஒத்திருப்பது நோக்கத்தக்கது. (14,—18 வயது ; இக்காலம் நாணம் முதலாயவைகளை உண்டாக்கும்.) இங்ஙனம் ஆண்தன்மை உண்டாயபின் ஒவ்வொருவரும் சிறந்த செயல்களைச்செய்து புகழையடைய விரும்புதல் இயல்பே. மற்றும் அப்புகழே அழியாப் பொருளாம். அதுவே மக்களுயிர்க்குப் பயனுக உள்ளது. அப் புகழைக் கொடுக்கவல்லது கொடையாம். இதனையறிந்தே பழம்புலவர், நான்காவதாக இதனைப் பயனென அமைத்தார். அங்ஙனமாய கொடையும் இதனின் இற்று இது என விகற்பித்துணர்ந்தல்லது கொடுத்தலாகாமையின் அவ்வாறு பகுத்துணரும் பண்பினை ஐந்தாவதாக ஆசிரியர் அமைத்தனர். இங்ஙனம் ஒருவன் இவ்வைந்தும் அமையப் பெற்றிருப்பதோடு, உலக நடையினை அறிந்து அதற்கேற்ப ஒழுகுதல் சிறப்பாக வேண்டுமென்பார், இறுதியாகப் பாடறிந்தொழுகல் என்பதனை ஆசிரியர் அமைத்தனர். இதனையே தேவரும்,

> "உலகத்தோ டொட்ட வொழுகல் பல கற்றும்
> கல்லார் அறிவிலா தார்"

என அறிவுறுத்தினர். இதுபோன்றே மற்றைய செய்யுட்களையும் உற்று நோக்கி, கற்றறிந்து மகிழ்ந்து இன்புறுமாறு வேண்டுகின்றேன்.

இனி இச்செய்யுளை ஒரு சிலர்போலின்றி, தமிழ்க்கண் கொண்டு நோக்குவார்க்குத் தமிழர்க்கே யுரிய சிலகொள்கைகள் வெளிப்படையாய் விளங்கும். அவையாவன; பிறர் மாட்டிரவாதவாறு பெற்ற நாணம், இரப்பவர்க்குக் கரவாமலீயுங்கொடை என்ற இரண்டுமே. தமிழ்மக்கள் பிறரிடத்துச் சென்றிரத்தலை இழிவெனவே கருதினர் என்பது

> "ஈயென இரத்தல் இழிந்தன்று"

எனவும்,

> "ஈயென இரத்தலோ வரிதே"

எனவுங் கூறும் பகுதியால் விளங்கும். இது கருதியே செந்நாப்போதரும்,

"இன்றியமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்"

என வலியுறுத்திச் சென்றனர். இவ்விடத்துப் பரிமேலழகர், தமிழர் பண்பினை யறிந்தே உரையெழுதிச் சென்றனர். இன்னுந் தமிழர்,இரந்தவர் இன்முகம் காணுமளவும் கொடுக்குந் தன்மையுடையார் என்பதனைப் புறநானூற்றுச் செய்யுட்களே தெள்ளத் தெளிய உரைக்கும். தமிழனைப்போல இரப்பவரனைவரையும் புரப்பவர் வேறு எவருமிலரெனல் மிகையாகாது.

## குறிஞ்சி நிலச் செய்திகள்

அறிஞர்களே!

மேற்கூறிய குறிஞ்சிக்கண் நிகழ்ந்த கூற்றுக்களை யறிந்த நாம், அவற்றில் அந் நிலச் செய்திகளாக வந்துள்ளவைகளையு மறிதல் இன்றியமையாதது. ஆதலின், அவைகளைக் கீழே தருவோம். மக்கள் கணையர், கிணையர், கைபுனைகவணர் ஆவர் (108). கிளி கடிதற்குத் தட்டையை யொலிப்பர். கானவர் தாங்கள் விலங்கின்மீது வைத்த குறி தப்பின், உடன் அவர்கள் மலையிலுள்ள கடவுளுக்கு வழிபாடாற்ற விரும்பிச் சுற்றஞ் சூழச் செல்வர் (165). கல்லலையிற் றங்கிய தேனைக் குறக்குடியின் சிறு மகாஅர் சென்று உண்பர். உண்ட மிச்சிலை மந்தியின் குட்டிகள் நக்கும் (168). சுனையின் பூக்களைக் கொய்வர், கண்ணி தொடுப்பர், செங்காந்தட் கண்ணி தொடுப்பர் (173). கடுவன் நடுங்க மந்தி தன் குட்டியுடன் சென்று மலைப்பக்கத்து ஒளியா நிற்கும் (233). தினைப்புனத்துக் கதிர்களை மந்தி, கவுள் நிறையவும் அங்கை நிறையவுங் கொண்டு, கடுவனொடு மலையிற் கடிதேறும். தலைவன் வருங்கால் கூகை குழறு திருத்தற் பொருட்டு, அதற்கு ஆட்டிறைச்சியொடு கூட்டிச் சமைத்த நெய் கலந்த வெள்ளிய சோற்றினை வெள்ளெலியினிறைச்சியொடு நிரம்பக் கொடுப்பர் (83). நோய் நீங்கற்கு மலையினின்று வரும் புதிய இனிய நீரில் நீராடுவர் (53). பெரிய புலி, வேழத்தைத் தாக்கி அதன் குருதியினைப் பருகினமையின் அக் குருதி படியப் பெற்ற கொழுவிய கவுளையுடைய வாயை வேங்கையின் அடிமரத்திற் றுடைக்கும்(158).

ஐவன வெண்ணெலைக் குறாஉங் காலத்து, மலைப் பாட்டுப் பாடுவர் (373). இஃது இக்காலத்து ஒரு வேலை செய்யுங்காலை பாட்டுப் பாடுதல் போலவாம். களிறு, தன்னெதிர் நிற்றற்கு அஞ்சி வலிய புலி ஓடுதலால், அயலுள்ள வேங்கை முறியப் பாயும் (217). யானை, பெரிய புலியைத் தாக்கியதால் குருதி படிந்த தன் கோடுகளை மலையினின்று வரும் அருவி நீரிற் கழுவும். இங்ஙனமாக இந் நிலச் செய்திகள் பலவாக உள்ளன. இனி இச் செய்திகளிடை யமைந்த வழக்குகளைக் காண்டலும் பொருத்த முடையதே. யாங்ஙனமெனில், அக்கால மக்கள் ஒழுக்கநிலையை யறிதற்கு வழக்கும் ஒரு கருவியாக இருத்தலின் என்க.

## வழக்கு

ஒவ்வொரு காலத்தும் ஒவ்வொரு வகையான வழக்கு வழங்கப்பட்டு வருதலியல்பு. அங்ஙனமே அக்காலத்துக் குறிஞ்சிக்கண் வழங்கிவந்த வழக்குகளைக் காண்பாம்.

அரிய காவலையுடைய அன்னையின் காவல் கடந்து, ஊர் மன்றுட் போகிப் பலருங் காணத் தலைவன் ஊர் வினவி யறிந்து அவண் செல்வாம், என வரும் பகுதியால், அக்காலத்து ஊர் மன்றுள், இன்னன் இன்ன ஊரிலுள்ளான், அவ்வூர் இன்னவிடத்துள தென்று தகுதிப்பாடுடையாரையும், அவரிருக்கும் ஊரையும், ஏட்டில் வரைந்துள்ள வழக்கு அறியப்படுகின்றது (35). மலைப் பிளப்புக்களிலே சுருக்குவார் வைத்து விலங்குகளைப் பிடிப்பதும் ஒன்று (82). தினைப்புனத்துள் விலங்குகள் வாராதிருத்தற்கும், வரின், இறத்தற்குமாகப் பொறிகள் அமைக்கப்பட்டிருந்த வழக்குச் "சிறு பொறி மாட்டிய பெருங் கல் லடார்" என்பதனு லறியலாகும். (அடார் - கருங்கற் பலகையை ஒருபால் சாய்வாக நிமிர்த்திக் கீழே முட்டுக்கொடுத்து உள்ளால் உணவு வைப்ப, அவ்வுணவை விலங்கு சென்று தொடுதலும் கல் வீழ்ந்து கொல்லும் பொறி) (119). அன்னை வெறி யெடுத்த வழி, வேலன் வந்து, தலைவியை முன்னிறுத்தி அவள் கூந்தலிற் பூவையெடுத்துப் போகட்டு, பரவுக் கடன் கொடுத்தலியல்பாம் (51). தலைமகளுற்ற நோயை அன்னை யறிதற்குக் கழங்கிட்டுப் பார்த்தல் அக்கால வழக்கு. கழங்கு : கழற்சி வித்துப் பலவற்றை முருகன் முன் போட்டு, வேலன் தன்

தலையில் ஆடைசூடி, கையிற் கோலொன்றேந்தி அக்கோலாற் கழங்கு வித்துக்களை வாரி யெடுப்புழிக் குறிப்புக் காணும் ஒருவகைக் குறி. இக் காலத்துப் பன்னிரண்டு காய்களைக் கொண்டு அவற்றுள் ஒன்றைக் குறியிட்டு அதினின்றுங் குறிபார்த்தல் வழக்காம் (47). இங்ஙனம் வழக்குகளால் ஒழுக்கநிலை அறியப்படும். இக் குறிஞ்சியின்கண் பெருந்திணை யொழுக்கமும் வந்துளது.

## பெருந்திணை

பெருந்திணை யென்பது பொருந்தாக் காமமாம். இதனை ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் "ஏறிய மடற் றிறம்" என்னும் சூத்திரத்து நான்கு வகையாக உரைக்குமிடத்து மடற்றிறம் என்பது முதலாவதாக அமைந்துள்ளது. இம் மடற்றிறம் அன்பொடு பொருந்திய ஐந்திணை மருங்கு விரவி வருமென்பது இக் குறிஞ்சியின்கண்ணும் இது போன்ற சங்க நூல்களுள்ளும் வருகின்றமையான் தெளிவாம். அச் செய்யுளாவது;

"வில்லாப் பூவின் கண்ணி சூடி
நல்லே முறுவலெனப் பல்லூர் திரிதரு
நெடுமாப் பெண்ணை மடன்மா ஞெயே
கடனறி மன்னர் குடைநிழற் போலப்
பெருந்தண் ணென்ற மரனிழற் சிறிதிழிந்து
இருந்தனை சென்மோ"

என்பதாம். இதன்கண் மடலேறியதாக அமைந்தமையின் பெருந்திணையாயிற்று. இவ்வாறமைந்த வொழுக்கம் சிறுபான்மையவென்றற்கு நூல் வழக்காற்றில் அருகிக் காணப்படுதலே தக்க சான்றும். அங்ஙனமாயின், இது யாங்ஙனம் நிகழுமோவெனில் தலைவன், தோழியிற் கூட்டம் வேண்டுங் காலை, தோழி அவன் கருத்தை ஆராய்வான் கருதிச் சேட்படுத்தும்வழி தலைவன் பலவற்றையும் எடுத்துக்கூறுவான். அங்ஙனம் உரைத்தும் உடன்படாவிடின் மடலேறி வருவன் எனக் கூறுநிற்பான். உடன், தோழி அதற்கஞ்சிக் கூட்டத்திற்கு உடம்படுவள். இல்லெனின், தலைவன் மடலேறி வருவன். மற்றும், தலைவி பெற்றோர் வரைவு மறுத்துழி, தலைவன் மடலேறி வந்து மணம் புரிவன். இவ்வொழுக்கம் நிகழ்

தற்குக் காரணம், களவு நிகழ்ந்தவழிக் கற்பு நிகழ்தல் ஒரு தலையாக உள்ள, தமிழ்நாட்டு வழக்கேயாம். இது குறித்தே நச்சினார்க்கினியர் கந்தருவம் கற்பின்றியமையவும் பெறும். இக் களவோவெனிற் கற்பு இன்றியமையப்பெறுது என உரைத்துச் சென்றனர். இதனால் காதலின் வன்மையும், தமிழ்மக்களில் ஒருத்தி ஒருவனையே விரும்பும் கற்பு நெறியும் அறியப்படுகின்றன. இன்னும் அவ்வொழுக்கம் கந்தருவ வழக்கம்போல் கருதியவர் கருதியவரைக் கருதியவாறு கூடிச் செல்லுதல், தமிழ் வழக்காற்றிலில்லை யென்பதை வலியுறுத்திச் செல்லுதலையுங் காண்க. இங்ஙனமாய இம் மடற்றிறம் அமைந்த செய்யுட்களைக் காலத்தாற் பிற்பட்டன என்று கூறின் பயனின்றி முடியும். இவ்வாருகப் பல வகை வழக்குகளும் ஒழுக்கங்களும் பலவகைச் சிறப்புக்களையும் அறிவித்தலைக் காண்க.

இதுகாறுங் கூறியவாற்ருல், குறிஞ்சிநிலப் பண்புகள் ஒருவாறு அமையப்பெற்றனவேனும், ஒவ்வொருவரும் இவ்வொன்றை நோக்குவதோடு அமையாது, நந் தமிழ்ப் புலவர்கள் மலர்ந்தருளிய சங்ககாலத்துச் செய்யுட்பகுதிகளை யான்றி நோக்கி, உண்மைப் பொருள்களாய தமிழ்மக்களின் மேம்பாடுகளைக் காணுவதோடு, பலரும் அறியச் செய்யுமாறும் வேண்டுகின்றேன்.

இங்ஙனமாக இந் நற்றிணை மாநாட்டில் களவமைந்த குறிஞ்சிப் பகுதியினை உரைக்குமாறு எனக்கு ஒரு பங்கு கொடுத்து ஆதரித்தும், தண்டமிழ்த் தொண்டே தொண்டெனக்கொண்டு வண்டமிழ் நூல்கள்மேல் மாநாடு நடத்தியும், பண்டைப்பெருமை பரவத் தமிழ்த் தாய்க்கு உய்வைத் தரமுயல், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரவர்கட்கும், கலைக்கடன் முகந்து புலத்துறைபோகிக் குணக்குன்றேறிச் சொன்மழை பொழியும் சீர்மேவு தலைவரவர்கட்கும், எனது உரைக்குச் செவிசாய்த்த செந்தமிழ்ச் செல்வர்கட்கும் எனது உளமார்ந்த நன்றியினைச் செலுத்தி அமைகின்றேன்.

**தமிழ் வாழ்க.**

---

# ரு. முல்லை

[வித்துவான் பாலசுந்தர நாயகர்]

தமிழ் மக்களின் ஒழுகலாற்றை அகம், புறமென இரு வகையாகத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. அவற்றுள், **அகவொழுக்கம்** தலைவன் தலைவியென இருவர்மாட்டும் நிகழ்வது; இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக் கூறமுடியாமல், அவ்விருவர்தம் அகத்துமட்டும் நிலவியிருப்பது.* இஃது இன்பம் எனப்படும். பிறவாற்றான் வரும் இன்பங்களினும் இவ்விரண்டும் சிறந்ததெனக் கூறுப. இதனை அகப்பொருள் என்று நூல்கள் கூறுகின்றன.

**புறவொழுக்க**மாவது, இவ்வாறிருந்தது என வெளிப்படக் கூறும் திறத்தனவாகிய அறம், பொருள், வீட்டிற்குரிய காரணங்கள் ஆகிய மூன்றும் ஆகும். இதைப் புறப்பொருள் என்பர். மக்கள் அனைவரும் இவ் விருவகை யொழுக்கங்களையும் மேற்கொள்ளற்குரியர். இவற்றைத் தமிழ் நூல்கள் விரிவாக உரைக்கின்றன.

இங்ஙனம் உரைக்கும் சங்கமருவிய நூல்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என மூவகைப்படும். இவற்றிலுள்ள கருத்துக்களைக் கற்றுவல்ல ஒரு சிலர் அறிய இயலுமேயன்றிப் பிறர் அறிதல்கூடாது. இந் நூற் கருத்துக்களை மக்கள் அனைவரையும் அறியச் செய்து, பண்டைய மக்களின் இயற்கையோடியைந்த இன்ப வாழ்வினைக் கடைப்பிடித்து ஒழுகுமாறு செய்தல், இக் காலத்திற்கு வேண்டப்படும் அறங்களிற் றலையாயது ஆகும். அப்போதுதான் இக்காலத் தமிழன், தமிழனாக வாழ்வான்; பண்டைத் தமிழர் ஒழுக்கங்களை நிலைபெறச் செய்து, தமிழ் மொழிக்கு ஆக்கம் அளிக்கத்தக்க மனப்பான்மையை எளிதில் தமிழ் மக்கள் கொள்ளுவர். ஆதலின், இத்தகைய மாநாடுகள், தமிழுக்கும், தமிழர்க்கும் பலவாற்றானும்

---

* "காதல் மனையாளும் காதலனும், கருத்தொருமித் தாதரவு பட்டதே இன்பம்" என்றார் அவ்வையார்.

உழைத்துவரும் **திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால்** நடத்தப்படுகின்றன. இந்த மாநாட்டில் நற்றிணையின் உட்பொருள் ஐவகையாக ஆராயப்படுகின்றன.

நற்றிணை என்பது எட்டுத்தொகை நூல்களில் முதற்கண் வைத்துச் சிறப்பிக்கப்படுகின்றது. "நற்றிணை நல்ல குறுந்தொகை" என்னும் வெண்பாவினால் இஃது அறியப்படும். இவ்வெண்பாவில், அகம், புறம், நற்றிணை என்னும் நூல்கள் அடைமொழியின்றிக் கூறப்பட்டுள்ளன. பிற நூல்கள் ஐந்தும் அடைகொடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. அடைமொழியின்றி இந்நூல்கள் கூறப்பெற்றிருத்தல் இவற்றிற்குத் தனிச்சிறப்பு உண்டென்பதை உணர்த்தும். **திருக்கோவையாரில்**, "திருவளர் தாமரை" என்னும் முதற் கட்டளைக் கலித்துறையில், "கோங்கு" என்னும் சொல் அடையின்றி வருதலால் மற்றைய அடையொடு புணர்ந்த சொற்களினும் சிறந்தது எனப் **பேராசிரியர்** உரை கூறியிருத்தல் காண்க. கடவுளை 'வள்ளல்' என்று கூறுமிடத்தும், பிற வள்ளல்களினும் இறைவனுக்கிருக்கும் சிறப்பினை அறிவித்தற்காகவே வாளா அடையின்றிப் பெரும் புலவர் பலரும் கூறியிருத்தலும் ஈண்டு அறியத்தக்கது.

எனவே, இந் நற்றிணை என்னும் நூல் மிகச் சிறந்தது என்பது போதரும். இந்நூலில் உள்ள செய்யுட்களின் தொகை நானூறாகும். ஒவ்வொரு செய்யுளும், ஒன்பதடிக்குக் குறையாமலும், பன்னிரண்டடிக்கு மேற்படாமலும் உள்ள அடி வரையறையுடையது. இந்நூலைத் தொகுப்பித்தோன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்போன். தொகுத்தோர் இன்னார் என்று புலப்படவில்லை.

இந்நூலிலுள்ள ஐவகைத் திணைகளில் ஈண்டுக் கூறுவது முல்லை பற்றிக் கூறப்படும் செய்யுட்களையே யாம்.

முல்லையாவது, பிரிந்த தலைவனும், தலைவியும் ஆற்றியிருத்தல். அஃது இருத்தல் எனப்படும். இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லையாகும். "தலைவி, பிரிவுணர்த்தியவழிப் பிரியார் என்றிருத்தலும், பிரிந்துழிக் குறித்த பருவம் அன்றெனத் தானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர்க் கூறுவனவும் போல்வன இருத்

தல். அப் பருவம் வருவதற்கு முன்னர்க் கூறுவன முல்லை சான்ற கற்பன்மையிற் பாலையாம். இனிப் பருவங் கண்டு ஆற்ருது தோழி கூறுவனவும், பருவம் அன்றென்று வற் புறுத்தினவும், வருவர் என்று வற்புறுத்தினவும், தலைவன் பாசறைக்கண் இருந்து உரைத்தனவும், அவைபோல்வனவும் நிமித்தமாதலின் இருத்தல் நிமித்தமாம்" என்று ஆசிரியர் நச்சிஞர்க்கினியர் இத் திணையினை விரித்துரைத்திருக்கின்ற னர். (தொல் - அகத். 14).

களவின்கண் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து வந்த தலைவனிடம், அவன் வருந்துணையும் தனிமை பொறுத்திருந்தமை கூறலும் அது.

தலைவன், தலைவியை விட்டுப் பிரிதல், ஓதற்கும், நாடு காத்தற்கும் அறப்புறங் காத்தற்கும், தூதிற்கும், பொருளீட் டற்கும், வேந்தற்குத் துன்பம் உற்றுழி உதவுதற்கும் ஆகும். அங்ஙனம் பிரியுங்கால், தலைவியிடம் சொல்லியும், சொல்லா மலும் பிரிவன். தலைவன் களவுப்புணர்ச்சியில், "நின்னிற் பிரியேன், பிரியின் உயிர் தரியேன்" என்றுன். அத்தகை யோன் பிரிதல் ஒக்குமோ எனின், ஒக்கும். அவன் தலைவன் ஆதலானும், தனக்குப் புகழும் பொருளும் உறுதல் இன்றி யமையாதது ஆகலானும், அவையே ஓர் ஆடவனுக்குச் சிறந் தவை என்ப ஆகலானும் பொருந்தும் என்க. ஆயினும், தலைவியின்மாட்டு முன்னுள்ள அன்பில் ஒரு சிறிதும் குறைந் தானல்லனும்.

தலைவியிடத்துத் தலைவன் தான் பிரிவினைக் கூறுங்கால் அவள் துன்புறுதலும் உண்டு. அங்ஙனம் துன்புறுங்கால் தலைவன், வலியுறுத்து அல்லது பிரியான். வலியுறுத்த லென்பது,

"போழ்திடைப் படாமல் முயங்கியும் அதன்தலைத்
தாழ்கதுப் பணிந்தும், முள்எயிற்று அமுதம்
கள்ளினும் மகிழ்செய்தும்"

பிரிதல். அன்றியும், உலகத்துள்ளார் எல்லாரும் பிரிதற்குரி யர்; பிரிந்தபின் ஆற்றியிருத்தற்கும் உரியர் என்று உலகிய லைக் கூறியும், அவள் குணநலங்களைச் சிறப்பித்தும், தான் பிரி யும் பொருட் கருத்தின் இன்றியமையாமையைக் கூறியும்

பிரிவன் ; தலைவியும் ஆற்றியிருப்பள். ஒரோவழி, தலைவியிடம் கூருது தோழியிடம் கூறிப் பிரிவன். தோழி, அப் பிரிவினைத் தலைவிக்கு உரைக்கும். தலைவன், தான் வருந்து தற்குரிய பருவம் இதுவென உரைத்துச் செல்லுவான் ஆதலின், அப் பருவம் வருந்துணையும் தலைவி அப் பிரிவினைப் பொறுத்திருத்தல் கற்பின்பாலதாகும் என்க. இதனுல், இம் முல்லை யொழுக்கம் கற்பினை விளக்கிக் காட்டுவதாகும். கற்பிற்கு முல்லை யென்ருெரு பெயருண்மையும் காண்க.

இனி, செய்யுட்களில் திணைகளை அறிவதில முதற் பொருளும், கருப்பொருளும், அவற்றினும் சிறப்புடையவாக உரிப்பொருளும் துணை புரியும். திணைகள் மயங்கியிருத்தலும் உண்டு. அவற்றை அறிதல் அகப்பொருள் நூல் உணர்ந்தோர்க்கு எளிது. நற்றிணை யென்னும் நூலுக்குப் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் உரை எழுதி, ஒவ்வொரு செய்யுளின் தலைப்பிலும் திணை வகுத்துரைத்திருக்கின்ருர்கள். அம் முறையில், முல்லைத் திணை நுதலிவரும் செய்யுட்கள் 28 ஆகின்றன. அச் செய்யுட் கருத்துக்களை ஈண்டுச் சுருக்கி உரைப்பதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

தலைவன் தலைவி எனத் தகும் தலைமைப் பணபுகளும், உயர்வும், செல்வமும், கல்வியும் வாய்ந்து உரிய பருவம் அடைந்துள்ள இருவரும், கொடுப்போரும் அடுப்போரும் இன்றி, ஊழ்வினையினுல், ஒரு பொழிற்கண் எதிர்ப்பட்டுத் தம்முள் உளம் இயைந்து களவாகக் கூடிப்பிரிந்து தத்தம் இடம் செல்லுகின்றனர். பின்னர், இவர்கள் கூட்டம் பல வகையானும் நடந்துவருகின்றது. தலைவன் தலைவியின் சுற்றத்தார் மகிழுமாறு பொருள்தந்து மணக்கக் கருதுகின்ருன். தன்னிடம் மிக்க பொருள் உளதாயினும், தானே உழந்து ஈட்டிய பொருளே மணத்திற்கு உரியதெனக் கருதுகின்ருன். அத்தகைய பொருளைப் பெறப் பிரிந்து செல்கின்ருன். செல்லுங்கால் தான் வரும் பருவத்தையும் சொல்லுகிருன். தலைவன் அப் பருவத்தில் வரவில்லை. அப்போது, தலைவி தோழியை விளித்து, "நல்லாய், நீ வாழ்க. தலைவர் கூறிய பருவமும் கழிந்தது ; மேகம் நீர் நிறைந்து இயங்குகின்றது ; வாடைக்காற்றுப் பனியொடு வந்து, என்னை முனிகின்றது

இவ்வாறு தனியே சிலநாட்கள் கழியுமாறாலும் தீங்கில்லை. மாலைக்காலத்து, ஆயர், கொன்றைப்பழத்தாற் செய்யப் பட்ட குழலை ஊதும் ஓசை, இவ்விடமெல்லாம் இசைக்கு மாயின் யான் உயிர்வாழேன்" (நற். 364) என்று கூறுகின் றாள். தோழி தலைவியை ஆற்றுகின்றாள்.

பின்னர், தலைவன் பொருள் கொணர்ந்து தலைவியை மணத்தற்குரிய நிலையினைப் பெற்றுத் தோழியைக் காண கின்றான். அப்போது தோழி, தலைவ, "இம் மணவினை முயற்சி உன்னாலே முடிந்தது. எங்களால் யாதுசெய்தல் கூடும். யாம், குராமலரை இடையன் அணிந்துகொள்ளு மாறு பூக்கின்ற இந்த அகன்ற இடத்திலுள்ள சிற்றூரில் வாழ்கின்றோம். இஃதொன்றுதான் எங்களால் முடியும். வேறு யாங்கள் யாது செய்யவல்லேம். ஆயினும், ஒன்று கூறுவேன். நீ, எம்மைவிட்டுப் பிரிந்து சென்றகாலத்து, யாங்கள் இல்லின்கண் இருந்து வருந்தவில்லை. ஆற்றியிருந் தேம். வருந்தினேமாயின், யாங்கள் பெருங்குடியிற் பிறந் தவர் நிலையை எங்ஙனம் பெறுதல்கூடும். "பெரியவல்லவோ பெரியவர் நிலையே" (நற். 266) என்றாள்.

மணம் நிகழ்ந்து தலைவனும் தலைவியும் இல்வாழ்க்கை யின்கண் மகிழ்ச்சியோ டிருக்கின்றனர். ஒருநாள், தலைவன் வினைக்காகப் பிரியவேண்டுமென்று சொல்லுகின்றான். அப் போது தலைவி, "நாங்கள் ஆற்றியிருப்போம்; வருந்துவோ மல்லோம். வருந்தினால், பெருங்குடியிற் பிறந்த பெரியோர் நிலையினை எங்ஙனம் பெறுவோம்" (நற். 266) என்று கூறிச், செல்ல உடன்பட்டாள். தலைவனும் செல்கின்றான்.

தலைவன், கூறிய பருவத்தில் வரவில்லை. கார்ப் பருவத் தில் மேகம் முழங்குகின்றது. மயிற்கூட்டம் ஆரவாரித்து மகிழ்ச்சி யடைகின்றது. அதனைக் கண்டு, தலைவி வருந்து வாள் எனக் கருதிய தோழி, மேகத்தை நோக்கி, "புயலே, எம் தலைவர், மல்லிகை மலர்கள் புதர்களில் மலர்ந்திருக்கும் கார்காலத்தில் வருவேன் என்று கூறிச் சென்றனர். இஃது அக்காலமன்று. பருவமல்லாக் காலத்து, நீ இடித்து மழை யினைப் பெய்கின்றாய்; மடமை மிக்க மயிற்கூட்டங்கள் மயங்கி ஆடுகின்றன. அவ்வாறு யான் நினையேன். இது கார்காலமென்று நினைத்து, எம் தலைவர் இன்று வருவர் என்று மயங்கிக் கூறேன். அவர், இயல்பாகிய கார்காலத்

திலேதான் வருவர். நீ வீணில் இடிக்கவேண்டா. மழையே நீ வாழ்க" என்று சொல்லுகின்றாள். அதுகேட்ட தலைவி, இது கார்ப்பருவம் அன்றெனத் தெளிந்தாள். அன்றியும், தன் தலைவர் பொய் கூறார் என்ற துணிவு அவளுக்கிருந்தமையால் உள்ளம் கலங்கவில்லை. (நற். 248)

இங்ஙனம் சில நாட்கள் கழிந்தன. தலைவன் வந்திலன் அதனால் தலைவி, மேகத்தைக் கண்டு, இஃது உண்மையிற் கார்ப்பருவமே. நம் தலைவர் வாராதது அவர் நெஞ்சம் கனியாமையாலேயாம் என நினைக்கின்றாள். மேகத்தை நோக்கி, மின்னல் முதலிய கருவிகளையுடைய மேகமே, நீ இங்கு வந்து இடித்து நீர்த்துளிகளைச் சொரிய வந்தாயல்லை. எம் தலைவர், தூதுபோல வந்தாயுமல்லை, அவர் நிலையை எனக்கு அறிவிக்கவந்தாய் போலும். அவர் நிலையை நான் அறிதலினால் என் துன்பம் நீங்கிவிடாது. நின் செய்கை சான்றோர் செய்கையாகாது.

"பிறர்நோயும் தந்நோய்போற் போற்றி அறனறிதல்
சான்றோர்கட் கெல்லாம் கடன்" —கலி. 139

ஆதலின், என் நோயையும் நின் நோய்போல் கருதுகின்றிலை. நின் இடிக்குரல் எனக்கு இனிமையைச் செய்யவில்லை. ஏனெனில், நின் இடிக்குரல், என் தலைவர்தம் நெஞ்சத்தைக் கனியச்செய்யும் ஆற்றல் அற்றதாதலின்" என்றாள்.

தலைவன் வாராமைக்குக் காரணம் அன்பின்மையன்று; தன் வினை முடியாமையே யாகும். அன்றியும் வழியில் வந்து கொண்டே யிருத்தலும் ஆகும்.

பின்னும் தலைவன் நீட்டிப்பத், தலைவி, கார்காலத்துக் கருப்பொருள்களைக் காண்கிறாள். குயில் கூவுகின்றது. ஆறு தெளிந்த தண்ணீர் நிறைந்து நன்றாக ஓடுகின்றது. ஓர் உழவன் இளமகள், கடகப்பெட்டியில், சிறு சண்பகமலரையும், குருக்கத்தி மலரையும் விரவத் தொடுத்துவைத்து, "இம் மலர்மாலை கொள்ளீரோ" எனக் கூவுகின்றாள். இவையனைத்தும் தலைவிக்குக் காம நோயை மிகுவிக்கின்றன. உடனே, தோழியை விளித்து, இவற்றைக் காட்டுகின்றாள். இவை ஒன்றினொன்று கொடிதாகவுள்ளன என்று சொல்லி வருந்துகின்றாள். தோழி ஆற்றுகின்றாள். (நற். 97)

ஒருவாறு ஆற்றியிருந்த தலைவி, மாலைக் காலத்தில், தோழியை விளித்து, "நம் தலைவர் இன்னும் வந்திலர். உதுக் காண்! பகலவன் மறைந்தான். பறவைகள் தத்தம் கூட்டிற் சென்று புக்கன. கலைமான், தன் பெண்மானைத் தழுவுகிறது. முல்லையரும்புகள் மலர்ந்திருக்கின்றன. காந்தள் மலர்கள், விளக்கு ஏற்றியதுபோல் நிரைநிரையாக விளங்குகின்றன. ஆயர் ஊதும் குழலோசை, பசுவின் கழுத்திற் கட்டியுள்ள மணியோசையோடு மெல்லிதாக ஒலியாநிற்கின்றது. தனிமையுடையோரைப் பெருந் துன்புறுத்தும் இம் மாலைக் காலம் அருள் என்பது சிறிதுமின்றி வருகிறது. இத்தகு மாலைக்காலம் நம் தலைவர் சென்ற நாட்டினும் தோன்றுமா? தோன்றுமாயின், தலைவர், "வினைவலித் தமைத லாற்றுர்" என்று, தன் காதல் மிகுதியாலும், பெண்மையாலும் கூறுகின்ருள்.

பின்னரும் ஆற்ருமையால தோழியைநோக்கி, "தோழி, நிலம் தன் னிலையினின்று மாறுபடுவதாயினும், நம் தலைவர் சொன்னசொல் பிழையார். அவர் வருதற்குமுன், இக் கார் காலம்வந்து என்னை வீணே நலிகின்றது. இப்போது அளிக்கத்தக்க தகுதியையுடைய யான் அருள்செய்யப் பெருதவளானேன். இரவில் இடையர் மரத்தில் நெருப்பைக் கொளுத்தி அதனை வீழ்த்துவம். அம் மரத்தின் வேரடிக்கட்டையில் கொளுத்தியுள்ள நெருப்பு எவராலும் அவிக்கப் படாது; அந் நெருப்பு, அவ் வேரடிக் கட்டையில் தானே தணியும். அதுபோல என் உள் வருத்திவரும் காமத்தீயும் தணிப்பாரின்றித் தானே தணிகிறது. யான் என் செய்யக் கடவேன்.

"வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்"

எஃபவன்ருே?" என்கிருள்.

தலைவி இங்ஙனம் துயருழந்து வருந்துங்கால், தலைவனொடு வினைவயிற் சென்ற வீரர் பலரும் மலர்மாலை சூடி வந்தனர். அதுகண்ட தோழி, தலைவியை நெருங்கி, "மடந்தாய், கவலற்க. நம் தலைவரொடு சென்ற வீரர் அனைவரும் மலர்சூடி வந்தனர். ஆதலின், நம் தலைவர் வினையினை வெற்றி

யொடு முடித்தார் என்பது வெளிப்படை. இனி, ஆண்டு ஒரு நொடிவரையும் தங்கார். விரைவில் வருகுவர். நீ இல்லறம் நிகழ்த்துக" வெனக் கூறுகின்றாள் (நற். 367).

இங்ஙனம இவர்கள் இருக்க, வினைவயிற் சென்ற தலைவன் வினைமுடித்தான். பின்னர், தன் தலைவியை நினைந்து கொள்கிறான். தேரினைக் கடிது செலுத்துமாறு பாகனிடம் கூறுகின்றான். தேர் வந்துகொண்டிருக்கிறது. வழியில், தலைவன் பாகனொடு பலபல மொழிகின்றான். தன் தலைவியின் நினைவே அவற்கு மீதூர்ந்து நிற்கிறது. பாகனை நோக்கி, "பாக, என் தலைவி கற்புமேம்பட்டவள். அவள் இருக்கும் ஊர் காட்டினிடத்துள்ளது. முல்லை நிலத்தில் வாழ்பவளாதலின், முல்லையாகிய கற்புநெறி இயற்கையிற் சிறந்திருக்கிறாள். அக்காட்டில், மழைபெய்து முடிந்த நாளிலே, இடையன் பல கால்கள் இட்டுப் பின்னிய உறியினைக் கையின்முன் வைத்து, தீக்கடைக்கோல் முதலிய கருவிகளை இட்டு வைத்திருக்கும் தோற்பையையும், பனையோலைப் பாயையும் முதுகிற் கட்டிப் பால் விலை கூறிச் செல்லுகிறான். மழை பெய்துகொண்டிருக்குங்கால், மழைத் துளி, அவன், உடம்பின் ஒரு பகுதியை நனைக்கின்றது. கையில் உள்ள கோலையூன்றி அதன்மேல் ஒரு காலை வைத்துக் குளிரால் ஒடுங்கி நிற்கின்றான். அப்போது, ஆடுகள் பலவிடங்களிலும் சிதறிக் கிடக்கின்றன. அவற்றை ஒருங்கு சேர்ப்பதற்கு, வீளை (சீழ்க்கை) யென்னும் ஓசையைத் தன் இதழ்களைக் குவித்து உண்டாக்குகின்றான். அவ்வோசை கேட்டு, ஆடுகள் ஒருங்குவந்து சேர்கின்றன.

"வானிகுபு சொரிந்த வயங்குபெயற் கடைநாள்
பாணி கொண்ட பல்கால் மெல்லுறி
ஞெலிகோல் கலப்பை யதனொடு சுருக்கிப்
பறிப்புறத் திட்ட பால்நொடை யிடையன்
நுண்பல் துவலை யொருதிறம் நனைப்பத்
தண்டுகால் வைத்த ஒடுங்குநிலை மடிவிளி
சிறுதலைத் தொழுதி ஏமார்த் தல்கும்
புறவி னதுவே" —நற். 142.

என்பது அப் பாட்டு.

இத்தகைய காட்டகத்தூரில் இருக்கும் என் தலைவி, இராப்பொழுதாயினும் வந்த விருந்தினைக் கண்டு மகிழ்வாள்; யான் சொல்லிய சொற்கொண்டு இல்லிருந்து நல்லறம் செய்யும் கற்புடையாள். அல்லாமலும், காக்கைகள் கரைந்து நம் வருகையினை அறிவுறுக்கும் போலும். அதனால் அவள் மிக மகிழ்ந்து, தன் புதல்வன் என்னைக் கேட்பதற்கு வேறொரு காரணத்தைப் பொய்யாகக் கூறி ஆற்றுவிக்கும் தன்மையள்" என்று இவ்வாறு இடைவழியில், தலைவியின் மகிழ்ச்சியைக் கண்டான்போன்று கூறுதற்குப் பயன், பாகன் இதனைக் கேட்டு மகிழ்ச்சியுற்று விரைந்து தேரைச் செலுத்துவான் என்பதாம்.

சிறிது நேரம் வாளா கழிகின்றது. அப்போது தலைவன் தன் "நெஞ்சிற்குப் புகல்கின்றான். "நெஞ்சமே, நாம், வினைவயிற் பிரிந்து செல்லும்பொழுது, "என்று வருவீர்" என வினவிய தலைவிக்கு, "நன்னுதல், முன்னியது முடித்தனமாயின் அன்றே வருவோம்" எனக் கூறினோம். இன்று, நம் வருகையை எமது பெரிய மாளிகையின் நீண்ட சுவரிலுள்ள பல்லி அறிகுறியாக அடித்துத் தெரிவிக்குமோ" எனப் பலவும் நினைந்து சொல்கின்றான். (நற். 169.)

பின்னும் சிறிது வழி கடந்த பின், "பாகனே, என் மாளிகையில், எங்கும் மின்னல் உண்டாகுமாறு அணிகலன்களை அணிந்து என் புதல்வன் துயிலுவான். நம் வருகையைத் தெரிந்தவுடன், தலைவி, தன் உடம்பிலுள்ள துவட்சியோடு சென்று, நம்மை எதிர்கொள்ள, அப் புதல்வனை "எந்தை வருக" என அழைப்பாள். பின்னர், இருவரும் வந்து என்னைக் காண்பர். அவர் காணுதலினால், நெடுவழி வந்த வருத்தம் முற்றும் நீங்கும். காதலியின் சொல் எனக்கு அமிழ்தாயிருக்கும். ஆதலின் அச் சொல்லை யான் கேட்குமாறு மிக விரைவாக நின் கைவன்மையால் தேரைச் செலுத்துக என்றான். (நற். 221.)

தலைவன் உள்ளம் பல பல நினைக்கின்றது; மகிழ்கின்றது. தலைவி, நாம் இன்மையால், வறிதாகவுள்ள மனையை நோக்கி வருந்துமோ? தனிமையை ஒரு நொடியும் பொறாத அவள் கவலை எவ்வளவினதோ? "பாக, நீ தேரினை விரைந்து செலுத்துவாயானால், நாம் நம் ஊரை விரைவில் அடைய

லாம. அதோ அணிமையில் நம்மூர் மரங்கள் தோன்றுவன காண்" (நற். 321); "இதுகாறும், பெய்யாதிருந்த மேகம், இப்பொது மின்னி இடித்து, மழையினைப் பெய்கின்றது. ஆதலால், இக் குறித்த பருவத்தில் தன் தனிமையை ஆற்ருது, உயிர்க்காதலில் அழத்தொடங்குவள். அவள் வருத்தத்தை மிகுவிப்பதற்கு, அவள் அழுமிடத்திற்கு எதிரே, இரவிலே, இடியோசைபோல, இன்னுத ஆயர், தம் புல்லாங்குழலை இசைக்கத் தொடங்குவர். இதனுல் அவள் பெருந்துன்பம் எய்துவள். அவள் கைவளைகள் தாமே கழலுமாறு உடல் இளைத்துப் போயிருக்கும். நீ தேரைச் செலுத்துக; செலுத்துக. தலைவி, நம் வரவினைக் கண்டாளாயின், நமக்கு விருந்தயர, இன்னகையொடு எதிர்வாள். விருந்தயர்தலுக்கு, இன்னகை இன்றியமையாத தன்ருே? அந் நகையினைக் கண்டு மகிழவேண்டும், விரைக" என்கின்ருன்.

மீண்டும், முன் ஒருகால், தன் வருகையைக் கண்டு தலைவி செய்த செயல்களைக் கூறுகின்ருன். "பாக, முன் ஒரு தடவை, யாம், வினைவயிற் பிரிந்து, மீண்டு வந்தோம். அப்போது மழை பெய்து பள்ளங்கள் எல்லாம் புது நீர் நிரம்பி இருந்தன. அவற்றில் தவளைகள் கூட்டமாகப் பேரொலி செய்துகொண்டிருந்தன. அவ்வோசையால், நம் தேரில் உள்ள மணியோசை அவளுக்குக் கேட்காதெனை எண்ணி, நம் வருகையை முன்னர் அறிவிப்பான் இளையோரை அனுப்பினேம். அவரும் சென்று அறிவித்தனர். உடனே, அவள், நாம் இல்லாமையால், அதுகாறும் சீவி முடிக்காததால், மாசுற்றுக் கிடந்த கூந்தலை நீராடி மாசு போக்கி, சில மலர்களைக் கொண்டு கூந்தலில் வைத்து முடித்துக்கொண்டிருந்தாள். அந்நிலையில், யாம் சென்றேம். அவள் எம்மைக் கண்ட அளவில், விரைந்து எழுந்து, துவள வந்து, அவிழ்ந்து குலையும் முடியையுடையாளாய் எம்மை அணைத்துக்கொண்டாள். இதனுல், அவள் தன் கற்புடைமையும், காதல் மிகுதியும் வெளிப்பட்டன. அந்நிகழ்ச்சி மறத்தற்கரிது. அஃது எம் உள்ளத்தில் என்றும் நிலைத்திருக்கிறது. அதுபோன்ற நிகழ்ச்சியை இன்றும் காண்டல் வேண்டும்." (நற். 42.) என்ருன்.

இடைவழியில், ஆண் மான், பெண் மானை விருப்பத்தோடு தேடிச் சென்றதைக் காண்கின்ருன். தானும், தன்

காதலியையும், காதற் புதல்வனையும் காணும் விருப்பம் மீதூரப்பட்டான். அதனை வெளிப்படையாகப் பாகனிடம் கூறும் முறையை ஒழித்துக் குறிப்பாகக் கூறுகின்றான்.

"பாக, உவக்காண்,
கழிபெயர் களரிற் போகிய மடமான்
விழிக்கண் பேதையொடு இனன்இரிந் தோடக்
காமர் நெஞ்சமொடு அகலாத்
தேடூஉ நின்ற இரலை யேறே" —நற். 242.

என்றான். பாகனும், அக் கூறிய கருத்தினைக் குறிப்பான் உணரும் அறிவு வாய்ந்தவன். ஆகவே, தேரைக் கடிது செலுத்தினான்.

வழியில் வந்துகொண்டிருக்கும்போது சில வணிகர் வெயிற்குக் கவித்த குடையோடு வருகின்றனர். அவர்கள், வழிநடந்த வருத்தத்தால் பெரும் பசி கொண்டனர். அப் பசியைப் போக்கிக் கொள்ள, புளியின் கனியை உண்டனர். அதனால், ஒரு சிறிது பசி நீங்கிற்று. வழிநடக்கும் வன்மை யினை மீண்டும் பெற்றனர். அவர்களை நோக்கி, "வணிகீர், இதுகாறும், எம் தலைவி, அட்டிற்சாலை புகுந்தறியாள். இன்று யாம் பிரிந்து வருதலினால், எமக்கு விருந்தயரத் தன்னுடம்பு வருந்த அட்டிற்சாலை புக்கனள். இதனை முன்னொருகாலும் பெற்றிலேம். இன்று யாம் பெறுதல் எதனாலோ?" என்று வினவுகின்றான். தலைவன் பெருவேட்கை யுடையனாதலின், இவரிடம் இதனைக் கூறுதல் தகுதியா? இன்றா? எனவும் அறியாமல், கண்ட வணிகரிடம் கூறினான். அவர்கள் இவன் தன்மையினை அறிந்து யாதும் கூறாது சென்றனர். (நற். 374.)

இங்ஙனம், பல்லாற்றானும், தன் நிலையையும், தன் காதலி நிலையையும் கூறிக்கொண்டு வந்த தலைவன் மகிழுமாறு பாகன், "தலைவ, நின் கண்ணி வாழ்க; அரசன் வினை முடியப்பெற்று நேற்றுத்தான் நீ நின் ஊர்க்குச் செல்ல விடை கொடுத்தானென்று எண்ணற்க. கலைமானொடு, பிணைமான் கூடி மகிழ்ந்து விளையாடாநிற்கும் இப் புறவின் கண் நின் தலைவி யிருக்கின்றாள். அவள், இப் பொருள்களைக் காண்டலும், தானும், அம் மகிழ்ச்சியைப் பெற விரும்புவது இயற்கையே. அவள் வருந்தாமலும், நீ கவலாமலும்

இருக்குமாறு தேரைச் செலுத்துவேன். நம் குதிரைகள் விரைந்து செல்லுந் தன்மையுடையன. என் கைவன்மையால், கான்யாற்றில் இடப்பட்ட மணற்கரை பின்னே செல்லுமாறு தேர் செல்லாநிற்கும். விரைவில், நீவிர் இருவீரும் கலந்து மகிழ்வீர்" என்று கூறினன். (நற். 121.)

தேர் வந்துவிட்டது, தோழி கண்டாள். உடனே, தலைவி, தலைவனை எதிர்கொள்ள வேண்டுமென்று நினைக்கின்ருள். ஏனெனில், முன்னொருகால், தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தான். அப்போழ்து தலைவி, அவனை மறுத்து, எதிர்கொள்ளாது புறக்கணித்தாள். அவன், வீட்டின்புறத்தே வருந்தி நின்ருன். அவ் வருத்த மிகுதியை அறிந்த பின்னரே தலைவி அவனை எதிரேற்றுக்கொண்டாள். அதுபோல இன்றும், காலம் நீட்டித்தான் என்று கருதி அவனை வரவேற்காதிருப்பளோ என ஐயுறுகின்ருள். அவன் வரவால், நெற்றியிலுள்ள பசலை, அழகினை உண்ணுது அகலும். ஆதலால் இவள், அவனைப் பணிந்து எதிரேற்றல் முறையென்று நினைந்து தலைவியிடம், மடந்தாய, தலைவர் தேர் வந்திறுத்தது ; நீ மகிழ்ந்து பணிந்து எதிர்கொள்க என்ருள். (நற். 182.)

தலைவனும் வந்தனன், தலைவி மகிழ்ந்து எதிர்கொள்கிருள். இருவரும் மகிழ்ச்சியோடிருக்கின்றனர். மேகம் மழை பெய்கின்றது. தலைவன். "மேகமே, நீ தண்ணுமையின் ஓசைபோன்று முழங்கி, மழையினைப் பெய்து, யாம் மகிழ்ந்து கூடியிருத்தற்கு உதவி செய்தனை. இவ்வுலகத்திற்கு ஆதாரமாக எவரும தொழுமாறு, பல மலைகளிலும் பரந்து உலவுவாயாக" என அம் மேகத்தை வாழ்த்துகின்ருன். இல்லறம் இனிது நடக்கின்றது.

இத்தகைய கருத்துக்களை, இந் நற்றிணை முல்லைப் பாடடுகள் கொண்டிருக்கின்றன. இப் பாடல்களில் திணைமயங்கி வரும் பாடல்கள் சில உள. எனினும், அவற்றில் சிறந்த உரிப்பொருளை நோக்கி முல்லையின்பாற் படுத்திக் கூறியது அறியத்தக்கது.

இம் முல்லையால், தலைவி, பருவம் வருங்காறும், ஆற்றியிருத்தலும், பருவம் வந்துழி வருந்துதலும், தலைவன் பொய் கூருனென அவன் மொழியில் உறுதிகொள்ளுதலும், தலைவியைத் தோழி ஆற்றுதலும், வினைமுடிக்கும்வரை தலைவி

யைத் தலைவன் நினைந்து வருந்தாது, வினைமுற்றியபின் வருந்துதலும், வழியிற் கண்ட பொருள்களினால், தலைவன் வேட்கை மிகுதலும், தேரை விரைந்து செலுத்துகவெனப் பாகனொடு குறிப்பாயும் வெளிப்படையாயும் கூறுதலும், முன்னைய நிகழ்ச்சிகளைத் தலைவன் நினைந்து பின்னும், அவை பெற விரும்புதலும், தேர் ஓசை கேட்டவுடன் தலைவி தலைவனைத் தன் மகனோடு எதிர்கொள்ளுதலும் பிறவுமறியப்படும்.

இப் பாட்டுக்களால், வினைமுடித்த வீரர் மகிழ்ச்சியால், அதற்கறிகுறியாக மலர்மாலை சூடிவருதல் (367), இடையன், தோற்பை, பனையோலைப்பாய், உறி முதலியவற்றோடு, கோலையூன்றி நின்று, ஆடுகளைத் திரட்ட வீளை என்னும் இசையை உண்டாக்குதல் (142), இடையர், மரத்தைவீழ்த்த அதன் அடியில் எரிகொளுத்தி, மரம் வீழ்ந்தபின் வேரடிக் கட்டையிலுள்ள நெருப்பைத் தணிக்காது சென்றபின் அந் நெருப்புத் தானே அவிதல் (289), கடகப் பெட்டியில் மலர் மாலைகளை வைத்து, உழவர் இளமகள் விலைகூறுதல் (97), மழை பெய்துவிட்டபின் நிரம்பிய புதுநீரையுடைய பள்ளத்தில் தவளைகள் ஒலித்தல் (42), பல்லி, காக்கை முதலியன பின்வருவனவற்றை முன் அறியுமாறு ஒலித்தல் (169, 161), மேகம் வழக்கம்போல் உலகியல் நடத்தற்கு மழையைப் பொழிதல் முதலிய அறியப்படுகின்றன.

சில உள்ளுறையுவமங்களும், இறைச்சியும் அமைந்து கற்போர்க்கு மகிழ்ச்சியளிக்கின்றன. இத்தகைய கருத்துக்களால், தமிழர்தம் நுண்ணறிவும் நாகரிகமும் தெளிவாக விளங்கும்.

**நக்கீரர்** பாடிய, "கொடுங்கட் காக்கை" என்று தொடங்கும் செய்யுளில் (நற். 367) 'அருமன்' என்னும் செல்வனையும், அவன் ஊராகிய 'சிறுகுடியை'யும் அவர் சிறப்பித்துக் கூறியுள்ளார். அவ் அருமன் வரலாறும், சிறுகுடியிருப்பும் நன்கு ஆராயத்தக்கவை.

இத்தகைய இந்நூல், நவில்தொறும், நவில்தொறும், கழிபேரின்பம் பயப்பதோடு, பண்டைத் தமிழர் ஒழுகலாறுகளையும், நுண்ணறிவையும் புலப்படுத்துகின்றது.

இந்நூலையும், இதுபோன்ற பிற சங்க நூல்களையும் கற்று, நுண்பொருள் உணர்ந்து, வாழ்க்கையைச் செம்மைப் படுத்தி இன்பம் நுகர்தல் அறிஞர் கடன்.

---